4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம். 8798.

## குமரி மாவட்டத்தில் தோட்ட தொழிலாளர் வேலைநிறுத்தம்

நாகர்கோவில், மே. 13—

குமரி மாவட்டத்தில் உள்ள பல்வேறு தோட்டங்களைச் சேர்ந்த 3 ஆயிரம் தோட்டத் தொழிலாளர்கள் இன்று வேலை நிறுத்தம் செய்தனர்.

தோட்டத் தொழிலாளர் சட்டங்களை அமுலாக்க கோரியும், தமது நியாயமான கோரிக்கைகளை வலியுறுத்தியும், அதிகரித்துவரும் போலீஸ் அடக்குமுறையைக் கண்டித்தும் இந்த வேலை நிறுத்தம் நடந்தது.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11) மதுரை 15 5 73 செவ்வாய் (மலர் 112

## கூலிப்படையினருக்கு அடிமேல் அடி

நாம்பென், மே 13—

கம்போடியாவின் தலைநகரான நாம்பென்னைச் சுற்றி 20 மைல் சுற்றளவில் விடுதலைப் படைகள் தீவிரத் தாக்குதலை நடததி வருகின்றனர்.

நகரின் தென்மேற்கிலும், மேகாங் நதி வழியிலும் கடுமையான தாக்குதலை விடுதலைப் படைகள்தொடுததுள்ளன. இதனல், அமெரிக்க ஆக்கிரமிப்பு படைகளுக்கும், பொம்மை அரசின் படைகளுக்கும் பலத்த சேதம் ஏற்பட்டுள்ளது.

### மக்களின் நம்பிக்கையை இழந்த

# தி.மு.க. தவருனவழியில் வெற்றிபெறமுடியாது

## வத்தலக்குண்டு கூட்டத்தில் தோழர் பி.ராமமூர்த்தி எச்சரிக்கை

**வத்தலக்குண்டு, மே. 14 —**

**மக்கள் ஆதரவைப்பெற முடியாத தி. மு. கழகம் அதிகாரத்தைக் காட்டி குண்டர்களை வைத்து உருட்டி மிரட்டி தேர்தலில் ஜெயித்து விடலாம் என்று முயற்சி செய்கிறது. இது மக்களுக்கு விடுக்கப்பட்டிருக்கும் சவாலாகும் என்று தோழர் பி. ராமமூர்த்தி அறிவித்தார்.**



**தி. மு. க. குண்டர்களின் ரௌடித் தனத்தை மக்கள் முறியடிக்க வேண்டும் என்றும் அவர் அறிவுறுத்தினர்.**

வத்தலக்குண்டில் தேர்தல் பிரச்சாரக் கூட்டத்தில் தோழர் பி. ராமமூர்த்தி பேசினர்.

அவருடைய பேச்சு வருமாறு:—

இம்மாதம் 20-ம் தேதி நடக்கும் வாக்கெடுப்பில் அ தி மு க வேட்பாளருக்கு ஓட்டுப போட்டு மிகப் பெரிய வெற்றி பெறுமாறு செய்ய வேண்டும்.

அதிகாலையிலேயே வாக்காளர்கள் வாக்குச் சாவடிகளுக்குச் சென்று ஓட்டுப் போடாவிட்டால் தி மு க வினர் கள்ள ஓட்டுப் போட்டு உண்மையான வாக்காளர்களுக்கு ஓட்டில்லாமல் செய்து விடுவார்கள். தி மு க மக்களிடம் செல்வாக்கிழந்து விட்டது, அதிகாரிகளையும், போலீசையுமே தி மு க நம்பியிருக்கிறது.

போலீஸ் பாதுகாப்பு இருக்கிறது என்று தைரியத்திஞல்தான் தி மு க குண்டர்கள் எதிர்க்கட்சியினரைத் தாக்க முற்பட்டிருக்கிறார்கள்.

தி மு க குணடர்களின் தாக்குதலை மக்கள் தைரியமாக எதிர்த்து நிற்க வேண்டும்.

ஒரு சில தி மு க குண்டர்கள் சேர்ந்து கொண்டு கூட்டத்தைக் கலைக்க அனுமதிப்பதா? இதை நாம் அனுமதிக்கவே கூடாது.

**வாலாட்ட முடியாது**

உசிலம்பட்டியில் தி மு க குண்டர்கள் கூட்டத்தைக் கலைக்க முற்பட்ட போது மக்கள் எதிர்த்து நிற்பதைக் கண்டவுடன் ஓட்டம் பிடித்தார்கள். அதேமாதிரி நாம் எதிர்த்துநின்ருல் வாலாட்ட முடியாது. ஓட்டுப் போட வருபவர்களை மிரட்டி தங்களை எதிர்ப்பவர்களுக்கு ஓட்டு விழாமல் செய்து விடலாம் என்று தி மு கழகம் நினைக்கிறது. இந்த மிரட்டல் உருட்டலினலும், ரௌடித்தனத்தினலும் இவர்கள் மேலும் மக்களிடமிருந்து தனிமைப்படத்தான் போகிருர்கள்,

இன்று தி மு கழகத்துக்கு ஊழியர்கள் இல்லை. தி மு க வில் பிளவு ஏற்பட்டதும் அவர்கள எல்லாம திமு திமு என்று விலகி வந்து விட்டார்கள.

**மக்கள் மன்றத்தில்**

தி மு க வின்லஞ்சஊழலை விசாரிப்பதற்கு கமிஷன் வேண்டுமா?

நாலைந்துவருடத்துக்குமுன் வட்டங்களும், மாவட்டங்களும் எப்படியிருந்தார்கள்? இன்று அவர்கள் இருக்கும் நிலை என்ன?

இது மக்களுக்குத் தெரியாதா?

கலெக்டர் அலுவலகங்களிலும் மற்ற அலுவலகங்களிலும் கருப்பு சிவப்புத் துண்டு போட்டுக்கொண்டு இவர்கள் வைத்தது சட்டமாக இருக்க வில்லையா?

இவர்கள் அடித்த கொள்ளைக்கு சுப்ரீம் கோர்ட்டை விட பெரிய நீதிமன்றமான மக்கள் மன்றமே சரியான தீர்ப்பு கொடுக்கப் போகிறது.

தி. மு. கழகத்தில் எம். ஜி, ஆர். லஞ்ச ஊழல் குற்றசாட்டை எழுப்பியதும் தொண்டர்கள் ஏன் பிரிந்து விட்டார்கள் என்பதை தி மு. க. தலைமை பார்க்க வேண்டும். கொள்ளையடிப்பதற்கென்றே கட்சி வைத்துக்கொண்டிருந்தால் அந்தக் கட்சியில் பிளவு ஏற்படுவதைத்தடுக்க முடியுமா?

இந்தநிலையில் தி.மு.க.வை விட்டு பிரிந்து வந்தவர்களை அடித்து நொறுக்கி பயமுறுத்தி தி மு க-வைக் காப்பாற்றலாம் என்று அதன் தலைமைநம்புகிறது.

அன்பால் அணைத்து வைததுக்கொள்ள முடியாத தொண்டர்களை-அடிக் கொருதரம் சொல்லிக் கொள்ளும் குடும்ப பாசத்தால் பிணைந்து வைத்துக் கொள்ள முடியாததொண்டர்களை-அடித்து நொறுக்குவதின் மூலமும்-பயமுறுத்துவதின் மூலமும் தங்களுடைய கட்சியைக் காபபாற்றலாம் என்று அதன் தலைவர்கள் நினைக்கிருர்கள்.

அ தி மு க தொண்டர்களை காவல் நிலையத்துக் கொண்டுசென்று நல்ல வார்த்தைகளை கூறிப்பார்ப்பதும், அதனல் பலனில்லாவிட்டால் இம்சிப்பதும் போலீசின் வேலையாக இருக்கிறது.

குண்டர்கள் செய்யும் அட்டகாசத்தாலும், போலீஸ் இதைப்பார்த்துக் கொண்டிருப்பதாலும் இன்று தாய்மார்கள்கூட வீறுகொண்டெழுந்து குண்டர்களை விரட்டியடிக்கும் நிலைமை ஏற்பட்டுள்ளது.

**தி. மு. க.வுக்கு ஜன்னி**

இந்த ஊரில் ஒரு ஆறுமுகத்தை இவர்கள் கொன்றிருக்கலால். அதனல் தி மு க வுக்கு எதிராக எவ்வளவு பெரிய எழுச்சி ஏற்பட்டிருக்கிறது-

இந்த எழுச்சியை கண்டு தி, மு. க. தலைமைக்கு ஜன்னி பிடித்துள்ளது.

இந்தத் தேர்தலுடன் நம் வேலை முடிந்து விடவில்லை. இங்கு தி மு க வைத் தோற்கடிபபதைத் தொடர்ந்து தமிழகம் முழுவதும் இடதுசாரி இயககம வலுப்படுவதற்கு நாம பாடுபட வேண்டும.

தி மு கவின் லஞ்சஊழலை எதிர்தது எம. ஜி. ஆர். வெளிவந்தவுடனேயே அதை மார்கசிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வரவேற்றது.

அதே சமயம் இந்திரா காங்கிரசுடன அ தி மு க சேரககூடாது எனறு நாங்கள் கவலைப்பட்டோம்.

**தி. மு. க. - இந்திரா ஊழல்**

தி மு க ஊழல் ரூ 10 கோடி எனறு மதிப்பிட்டால்இந்திராகாங்கிரஸ் ஊழலை ரூ 100 கோடிக்கு மதிப்பிட வேண்டும்.

இந்திரா காந்தி தன் மகனுககாக மாருதி கார் கம்பெனிக்கு லைசென்ஸ் கொடுத்தும் இந்த கம்பெனிககாக அரியாஞவில் ஏழை விவசாயிகளின் 300 ஏக்கர் நிலத்தை அற்ப சொற்பமான நஷ்டஈடு கொடுத்து ஆர்ஜிதம் செய்ததும் ஊழலில்லையா?

எம். ஜி. ஆர். பிரிந்ததும் அவருயை கட்சி இந்திரா காங்கிரஸ் பக்கம் போகக்கூடாது என்று சொன்னேம்.

நல்ல வேளையாக இந்திரா காங்கிரஸ் பக்கம் அ தி மு க போகாத நிலை ஏற்பட்டது.

இந்நிலையில் மார்க்சிஸ்ட் கட்சியும் அ தி மு க-வும் இத்தேர்தலில் கூட்டாக செயல்படும நிலை உருவாகியிருக்கிறது. இந்த நிலைமை தேர்தலுக்குப் பிறகும், நீடித்து தமிழகத்தில் இடதுசாரி இயக்கம் வளருவதற்கான நிலை வளரவேண்டும்.

இங்கு நடைபெறும் தேர்தல்,வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது. பஙகாவுக்கு (பீகார்) அடுத்தபடியாக திண்டுக்கல் தொகுதியில் இந்திரா காங்கிரஸ் டெபாசிட் இழப்பதை உலகம் முழுவதும் பார்க்கும்.

கடந்த ஆகஸ்ட் மாதம மதுரையில் மாபெரும் ஊர்வலம் நடத்திய தி மு க இன்றில்லை என்பதையும இந்தத்தேர்தல் உணர்த்தப் போகிறது. தி மு க இன்று மக்களை நம்பியிருக்கவில்லை.

தி மு க உடைஞ்சது உடைஞ்சது தான் இனி யாரும் அதைக் காப்பாற்ற முடியாது.

**சிண்டிகேட் கூட்டு**

முஸ்லிம்களை வெட்டிக் கொல்ல வேண்டும் என்று வெறிபிடித்தலையும் ஜனசங்கத்துடனும். முதலாளிகளுக்கு ஒளிவு மறைவின்றி வக்காலத்து வாங்கிப் பேசும் சுதந்திராவிடமும் காமராசர் கூட்டு சேர்ந்துள்ளார். சிண்டிகேட் காங்கிரஸ் தகர்ந்து நெறுங்கிக் கொண்டிருக்கிறது. மக்களின் நம்பிக்கையைப் பெறமுடியும் என்ற நம்பிக்கை அந்தக் கட்சியைச் சேர்ந்த வர்களுக்கே இல்லை

**மக்களை நம்பியே...**

சிண்டிகேட் இண்டிகேட் தி மு ககட்சிகளைப் போல் நமக்கு பணவசதி இல்லை. மக்களை நம்பியே நாம் தேர்தல் இயக்கத்தை நடத்துகிறேம்.

நம்முடைய கூட்டங்களுக்கு மக்கள் திரண்டு வருவதும், அமைச்சர்கள் கலந்து கொள்ளும் கூட்டங்களுக்குகூட மக்கள் போகாதிருப்பதும் அ தி மு க வேட்பாளரின் வெற்றியை உறுதி படுத்துகின்றன,

எனினும் நேர்மையான வழியில் தேர்தல் நடத்தாமலிருக்க தி மு க செய்யும் சூழ்ச்சிகளை முறியடிக்க வேண்டிய பொறுப்பு மக்களுக்கு இருக்கிறது. தி மு க வின் உருட்டல் மிரட்டல்களுக்கு பயப்படாமல், மக்கள் திரள் திரளாக அதிகாலையிலேயே "கியூ" வரிசையில் வந்து நின்று அ தி மு க வேட்பாளருக்கு அமோக வெற்றி கிட்டுமாறு செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.




## தி. மு. க. கொடி கட்ட மறுத்த ரிக்ஷா தொழிலாளிக்கு அரிவாள் வெட்டு

### காலித்தனம் தீவிரமாகிறது

திண்டுக்கல், மே 14—

நேற்று இவ்வூர் ரயில்வே நிலையத்தின் முன் நிறுத்தப் பட்டிருந்த சைக்கிள் ரிக்ஷாக்களில், தி மு க கொடிகளையும் தட்டிகளையும் கட்டச்சொல்லி. தொழிலாளர்களை தி மு க ரௌடிகள் கட்டாயப் படுத்தினார்கள்.

அதற்கு அவர்கள், "நாலு கட்சிக்காரர்களும் ஏறிச் செல்லக்கூடிய ரிக்ஷாக்களில், ஒரு கட்சிக்கொடியைக் கட்டினல், பிழைப்புக் கெட்டுவிடுமே" — என்று கூறி கட்ட மறுத்தனர்.

**அரிவாள் வெட்டு**

இதைக்கேட்டதும் தி மு க ரௌடிகளுக்கு ஆத்திரமும் ஆவேசமும் ஏற்பட்டு, அந்தத் தொழிலாளர்களை அரிவாளாலும் தடிகளாலும் தாக்கினர்கள், அதனல் 2 தொழிலாளர்களுக்கு பலத்த வெட்டுக் காயமும் தடியடிக்காயமும் ஏற்பட்டது.

தாக்குதல் நடத்திய ரௌடிகள் நேராக அனுமந்தன் நகருக்குச்சென்று, அங்கிருந்த செந்தில் என்ற அ தி மு க ஊழியரை அரிவாளால் வெட்டிவிட்டனர்.

இந்த தி மு க ரௌடிகள் காமராஜர் படத்தையும் சிவாஜி கணேசன் படத்தையும் ஒட்டிய காரில் வந்தனர்.

இது சம்பந்தமாக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் தலைவர் ஏ பாலசுப்ரமணியம் தொலைபேசி மூலம் போலீசுக்குப் புகார் செய்தார். போலீஸ் வருவதற்குள், தி மு க ரௌடிகள் ஓட்டம் பிடித்து விட்டனர்.

இரவு முழுவதும் தி மு க ரௌடிகள் கத்திகளையும் அரிவாள்களையும், இரும்புக் குழாய்களையும் எடுத்துக் கொண்டு தெருக்களிலெல்லாம் அட்டகாசம் செய்கிருர்கள். ரௌடிகள் ரோடுகளில் திரிகின்ற பொழுது தங்கள் கையிலுள்ள இரும்புக்குழாய்களை ரோடில் தேய்த்து சப்தம் உண்டாக்கியும், ரோடில் போகிறவர் வருகிறவர்களையெல்லாம் "வராதே! ஓடு"!—என்று மிரட்டியும் அட்டூழியம் புரிகிருர்கள். இவர்களுக்குப் பாதுகாப்பாக போலீசும் கூடவே செல்லுகிறது,

**காங்கிரஸ் ஆபீசிலும்**

மற்றும் கிழககு ரத வீதியிலுள்ள சிண்டிகேட் காங்கிரஸ் தேர்தல் அலுவலகத்திலும் தி. மு. க. ரௌடிகள் புகுந்து, அங்கிருந்த தி. க. ஆறுமுகம் என்பவரையும் அரிவாளால் வெட்டி விட்டார்கள்.

**கண்டன ஹர்த்தால்**

இப்படி தின சரி தி மு க ரௌடிகள் வன்முறையில் இறங்கி, அமைதியையும் ஜனநாயக ஒழுங்கு முறைகளையும்கெடுத்து வருவதால் இந்த அக்கிரமத்தைக் கண்டிக்க 12—5—73 பிற்பகல் முழுவதும் அரைநாள் கண்டன ஹர்த்தால் செய்யும் படி, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் அ தி மு கவும் வலது கம்யூனிஸ்ட் குடியரசுக்கட்சி, உழைப்பாளர் கட்சி ஸ்தாபன காங்கிரஸ் இந்திரா காங்கிரஸ், தமிழ்நாடு முஸ்லீம் லீக், திண்டுக்கல் ராஜாஜி சுதந்திரா கட்சி முதலிய பல கட்சிகளும் அறைகூவல் விடுத்தனர்.

அதன்படி ஹர்த்தால் நடைபெற்றது கடையைத் திறந்து வைத்தால் பாதுகாப்புத்தருவதாக தி மு க வினரும் போலீசாரும் மைக் பிரச்சாரம்செய்தனர். அதைச் சட்டை செய்யாமல் கடைகள் அடைக்கப் பட்டிருந்தன.

## தீட்சிதரின் தரங்கெட்ட அரசியல்

வத்தலக்குண்டு, மே.14—

"எம். ஜி. ஆருக்கு அரசியல் அறிவு கொஞ்சம்கூட இல்லை. அப்படியிருந்தும் அவர் கட்சியை ஆரம்பித்துள்ளார், அவரால் தலைமை தாங்கி எப்படி நாட்டுக்குச் சேவை செய்ய முடியும்?"

—இவ்வாறு. இங்குநடந்த இந்திரா காங்கிரஸ் தேர்தல் பிரச்சாரக் கூட்டத்தில் மத்திய உள் துறை அமைச்சர் உமாசங்கர் தீட்சித் கேட்டுள்ளார்,

அ. தி. மு. க-வுடன் இந்திரா காங்கிரஸ் ஒட்டியிருந்தபோதெல்லாம் எம். ஜி. ஆருக்கு அரசியல் அறிவு இருந்தது.

மின் வெட்டுக்குக் காரணம் தமிழக தி. மு. க. அரசு மட்டுமே என்றுகூறி தமிழ்நாடு முழுவதும் அ. தி க,வுடன் கூட்டாக கண்டனக் கூட்டங்கள் நடத்திய பொழுதெல்லாம் எம. ஜி. ஆருக்கு அரசியல் அறிவு இருந்தது.

சென்ற மாதம் இந்திரா காங்கிரஸ் கட்சியின் மாநிலக்குழுக் கூட்டத்தில் அ. தி. மு. க., இந்திரா காங்கிரஸ், வலது கம்யூனிஸ்ட் ஆகிய மூன்று கட்சிகளும் ஒரு கூட்டணி அமைக்க வேண்டும் என்றுதீர்மானம் போட்ட போதெல்லாம எம். ஜி. ஆருக்கு அரசியல் அறிவு இருநதது.

திண்டுக்கல் உபதேர்தலில் இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் போட்டியிட வேண்டும், அதற்கு அ தி மு க ஆதரவளிக்க வேண்டும். அல்லது இம் மூன்று கட்சிகளும் ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒரு பொது வேட்பாளரை நிறுத்த வேண்டும் என்று எம். ஜி. ஆருடன் இந்திரா காங்கிரஸ் தலைவர் ஆர். ராமையா பேரம் பேசிய பொழுதெல்லாம் எம ஜி ஆருக்கு அரசியல் அறிவு இருந்தது.

**ஆனல்...**

இன்று, இந்திரா காங்கிரஸ் வேட்பாளருக்கு ஆதரவு அளிக்காமல், அ. தி, மு. தனது சொந்த வேட்பாளரை நிறுத்தியவுடன்—எம். ஜி. ஆருக்கு அரசியல் அறிவு இல்லையாம்,

இப்படி பேசுபவர் யார்? இந்திரா காந்தியின் மிக நெருக்கமான—மிகமுக்கியமான மந்திரி உமாசங்கர் தீட்சித்.

### அ தி மு க கூட்டத்திற்கு

## மின்சப்ளையைநிறுத்து மின்சாரத் தொழிலாளியிடம் தி மு க வினர் மிரட்டல்

அலங்காநல்லூர், மே. 14—

சென்ற11—5—73அன்று திண்டுக்கல் நாடாளுமன்றத் தொகுதியைச் சேர்ந்த பாலமேட்டில் இரவு 11 மணி வரை தமிழக அமைச்சர்கள் மாதவன் கண்ணப்பன் ஆகியோர் பேசிய கூட்டம் நடைபெற்றது.

பிறகு இரவு சுமார் 1½ மணிக்கு அணஞ தி. மு.க. அபேட்சகரை ஆதரித்து சர்வ கட்சி கூட்டம்நடைபெற்றது.அதில் எம.ஜிஆர். பேசினர்.

கூட்டம நடந்து கொண்டிருக்கும் பொழுது பாலமேடு தி மு க பிரமுகர்கள் பி. பழனிசாமி: ஆர். செல்வராஜ் தலைமையின்கீழ் சுமார் 50 நபர்கள் தடி, கம்பு,வேல் கம்பு முதலிய ஆயுதங்களுடன் வீட்டில் தூங்கிக் கொண்டிருந்த மினசாரத் தொழிலாளி கருப்பு என்ற வயர்மேனை (சிஐடியூ) எழுப்பி எம். ஜி. ராமச்சந்திரன பேசுகிருர். ஆகவே எஸ் எஸ் 2வது டிரான்ஸ்பார்மர் சப்ளையை நிறுத்த வேண்டுமென்று கட்டாயப் படுத்தினர். அதற்கு அந்த வயர்மேன் மறுக்கவே அவரை மிரட்டி விட்டு

(4-ம் பக்கம் பார்க்க)

## சங்கரய்யா பேசிய கூட்டத்தில் கல்வீச்சு

திருமங்கலம். மே. 13—

.கப்பலூரில் தி.மு. க. ரௌடிகள் கைவரிசை காட்ட ஆரம்பித்துவிட்டார்கள்.

12—5—73ந்தேதி இரவில் நடந்த பொதுக்கூட்டத்தில் தோழர் என். சங்கரய்யா தி.மு.க. வன்முறைகளையும், ஜனநாயக விரோத நடவடிக்கைகளையும் கண்டித்து பேசிக்கொண்டிருந்தார்.

அச்சமயத்தில், கூட்டத்தில் கற்கள் வந்து விழுந்தன. •கூட்டத்தினர் அனைவரும் "தி. மு. க. ரௌடித்தனம் ஒழிக!" ரௌடித்தனத்தை முறியடிப்போம்!" —என்று ஆத்திர ஆவேசத்துடன் சீறி எழுந்தனர்.

கூட்டத்தினரை அமைதிப்படுத்தி, 'தி.மு.க. வுக்கு மக்கள் ஆதரவு சுருங்கிக் கொண்டுவருவதால் தோற்றுப் போய் விடுவோமோ என்ற பயத்தால், ரௌடிததனத்தில் இறங்குகிருர்கள். நாம் 20ம்தேதி தேர்தல்நாள் வரையிலும் காரியத்திலேயே கண்ணுயிருக்க வேண்டும்" —என்று தோழர் சங்கரய்யா கூறினர்.

# தீக்கதிர்

## கருணாநிதி கட்சியின் அராஜகத்தை முறியடிப்பீர்!

திண்டுக்கல் தேர்தலில் தி மு க. வெற்றி பெறப் போவதில்லை என்பதை உணர்ந்த பிறகு தி.மு.க. வினரின் கொலைவெறியாட்டம் எல்லைமீறி போய்க்கொண்டிருக்கிறது. அவர்களது கொலை வெறியாட்டத்திற்கு அரசாங்க அதிகாரிகளும் போலீசாரும் முழுக்க முழுக்க பாதுகாப்பு அளித்து வருகின்றனர்.

மே 11, 12-ம் நாட்களில் திண்டுக்கல் நகரத்தில் பல கொலை வெறித் தாக்குதல்களை நடத்தியுள்ளனர்.

திண்டுக்கல் நாகல் நகரில் உள்ள அ. தி. மு. க தேர்தல் காரியாலயம் தாக்கப்பட்டுள்ளது. தி. மு க. லாரி ஒன்றில் வந்து தாக்கியுள்ளார்கள்.

மே 11-ல் ரயில் நிலையத்திற்கு அருகில் அ தி மு க கொடியைக் கட்டிக்கொண்டிருந்த ரிக்ஷாத் தொழிலாளி ஒருவரைத் தாக்கியுள்ளார்கள்,

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, பென்ஷனர் தெருவில் உள்ள அ. தி. மு க காரியாலயத்தை தாக்கி நால் வரை படுகாயப்படுத்தியுள்ளார்கள்.

இந்த அராஜக வெறியாட்டத்தை எதிர்த்து திண்டுக்கல் நகரமே ஆவேசம் அடைந்துள்ளது. அர்த்தால், கடையடைப்பு நடத்தி கண்டனம் தெரிவித்துள்ளனர் மக்கள்.

இதே நிலைமை தொகுதியெங்கும் நிலவுகிறது.

மதுரையில் ஒரு ஊர்வலத்தில் தி மு. க. எதிர்ப்பு கோஷங்கள் போட்டதற்காக 40 பேரை கைது செய்துள்ளனர்

சில்வார்பட்டி என்னும் இடத்தில் நடிகர் ராஜேந்திரன் கையில் துப்பாக்கியை எடுத்துக்கொண்டு எதிர்க் கட்சியினரை மிரட்டியதாகச் செய்தி வந்துள்ளது.

வத்தலக்குண்டில் ஆறுமுகம் கொலை செய்யப் பட்ட பிறகு கொலைகாரர்களை கைது செய்யாத போலீஸ் எதிர்க் கட்சியினரின் ஊர்வலங்களை தாக்குவோரைக் கைது செய்யாமல், ஊர்வலத்தில் செல்வோரை கைது செய்து சிறையில் அடைத்துள்ளனர்,

திண்டுக்கல் நகரத்திலே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அலுவலகத்தையும் தாக்க திமுக ரவுடிகள் முயற்சித்துள்ளனர். தோழர் சங்கரய்யா திருமங்கலத்திற்கு அருகில் ஒரு கிராமத்தில் பேசும்போது எங்கோ ஒளிந்துகொண்டு கல்லெறிந்துள்ளனர்.

இவ்வாறு தொகுதி முழுவதுமே தி மு க வினர் வெறிகொண்ட மிருகம்போல எதிர்க்கட்சியினரை குறிப்பாக அ தி மு க வினரைத் தாக்கி தேர்தல் வேலை நடக்காமல் முடக்கமாக்க முயற்சிக்கிறார்கள்

தாங்கள் தோல்வியைத் தழுவிக்கொள்ளப்போவது நிச்சயம் என்று உணர்ந்த பிறகு இந்த வெறித்தனம் தீவிரமாகியுள்ளது.

"திண்டுக்கல் லோக்சபைத் தேர்தல் முடிவை திண்டுக்கல் வாக்காளர் அளித்த முடிவாகத்தான் கொள்ளலாமேயொழிய தமிழ்நாட்டு மக்கள் அளித்த தீர்ப்பாக கொள்ளமுடியாது" என்று முதலமைச்சர் கருணாநிதி மதுரையில் நிருபர்களிடையே பேசியது தனது கட்சி தோல்வியடையப்போவதை மறைமுகமாக ஒப்புக்கொள்கிறார்.

தோல்விக்கு முன் எதிர்க்கட்சியினர் செயல்பட முடியாதபடி செய்வது—குறிப்பாக இந்தத் தொகுதியில் அமோகமாக வெற்றியடையும் வாய்ப்புள்ள அ தி மு க வை பலாத்காரத்தின் மூலம் ஒடுக்கி விடுவது கருணாநிதியின் தந்திரமாகும். இதன் மூலமாவது தான் வெற்றியடைய முடியுமா என்று பார்க்கிறார்.

ஆறுமுகத்தை கொலை செய்த கொடுமையினைக் கண்டனம் செய்ய இதுவரை கருணாநிதி முன்வரவில்லை. திண்டுக்கல்லில் திமுக வினர் நடத்தும் கொலைவெறித் தாக்குதலை தடுக்க முன்வரவில்லை. இதன் பொருள் என்ன? கருணாநிதி கட்சியினர் நடத்தும் கொலை வெறியாட்டத்துக்கு பச்சை விளக்கு காட்டுகிறார் என்பதல்லாது வேறு என்ன?

பலாத்காரத்தின் மூலம் வெற்றியடைந்துவிடலாம் என்று கருணாநிதி தப்புக் கணக்கு போடுகிறார் போலீஸ் பாதுகாப்பினை தனது கட்சியின் வன்முறையாளருக்கு அளிப்பதின் மூலம் வென்றுவிடலாமெனக் கனவு காண்கிறார். இவ்வாறு வேலியே பயிரை மேய்வது போன்ற ஓர் அசாதாரணமான நிலைமையை உருவாக்கியுள்ளனர்.

நேர்மையான நியாயமான அமைதியான தேர்தலை நடத்துவதற்கு திமுக விரும்பவில்லை என்பதையே இந்நிகழ்ச்சிகள் எடுத்துக் காட்டுகின்றன.

திண்டுக்கல் தொகுதி வாக்காளர்களே!

தி மு க வினரின் இந்த அராஜகத்தை முறியடித்தாக வேண்டும்; இதற்கு தலை வணங்குவது கூடாது இதைக் கண்டு பின்வாங்கக்கூடாது.

மார்க்சிஸ்ட் கட்சித் தோழர்களும் அ தி மு கவினரும் வலது கம்யூனிஸ்ட் கட்சியினரும் ஏனைய சகோதரக் கட்சியினரும் உறுதி குலையாது செயல்படவேண்டும்.

மேலும் மேலும் மக்களை அதிகமாக திரட்ட வேண்டும்; தி மு க வினரின் ஒவ்வொரு வன்முறையையும் மக்கள் முன்பு அம்பலப்படுத்தி அவர்களை எதிர்த்து கட்டுப்பாடாக நின்று போராட வழிகாட்ட வேண்டும்.

அதே சமயத்தில் பேரெழுச்சி கொண்டுள்ள திண்டுக்கல் தொகுதி மக்களிடையே தேர்தல் வேலைகளை முறைப்படுத்தி அ தி மு க வேட்பாளர் வெற்றிபெறச் செய்வதன் மூலமே கருணாநிதியின் அராஜகத்தை முறியடிக்க முடியும் என்பதை உணர்ந்து செயல்படும்படி அறைகூவி அழைக்கிறோம்,

### அ.தி.மு.க.வை தாக்கிவிட்டு- மார்க்சிஸ்ட் அலுவலகத்தை தாக்க

# தி.மு.க.ரவுடிகள் வந்தனர்

## ஆயிரம் தொழிலாளர் கம்பும், தடியுமாய் வந்து பாதுகாத்தனர்

திண்டுக்கல், மே 12— திண்டுக்கல் தேர்தலுக்கு இன்னும் ஒரு வாரம் இருக்கிறது தி. மு. க வினர் ரௌடித்தனம் அத்துமீறி வருகிறது நகரில் ஆண் பெண் யாரும் பயமின்றி நடமாட முடியவில்லை. எந்தச் சமயத்தில் என்ன நடக்குமோ என்ற பதட்ட நிலையில் திண்டுக்கல் மக்கள் இருக்கிறார்கள்.

ஜாமீன் வாங்குவதே சந்தேகம் என்ற நிலைமைக்குத் தேய்ந்து கொண்டிருக்கும் தி மு க. வானது கலகம் கச்சரா பண்ணி குழப்பம் பாத்தி விடலாமென்று நினைப்பதாகத் தெரிகிறது.

### ரௌடிகள் தயாரிப்பு

வெளி மாவட்டங்களிலும், மதுரை மாவட்டத்தில் திண்டுக்கல் தொகுதி அல்லாத ஊர்களிலுமிருந்து ஏராளமான ரௌடிகளை தி. மு. க. வினர் அழைத்து வந்திருக்கிறார்கள்.

அவர்கள் நேற்று முதல் பகிரங்கமாக, பட்டப் பகலிலேயே அரிவாள் வெட்டில் இறங்கிவிட்டார்கள்,

### போலீஸ் முன்னிலையில்

மணிக்கூண்டு அருகிலுள்ள தி. மு. க. தலைமைத் தேர்தல் அலுவலகத்தில் இருந்து இன்று மாலை 5 மணிக்கு, தி மு க கொடிகள் கட்டிய இரண்டு வேன்களிலும் ஒரு ஜீப்பிலும் சவுக்கு உருட்டுக்கட்டைகளும், சோடா பாட்டில்களும், இரும்புக் குழாய்களும், அரிவாள்களும் ஏற்றப்பட்டன.

போலீஸ் அதிகாரிகள் புடைசூழநின்று அதைப் பார்த்துக்கொண்டு நின்றனர்.

அங்கிருந்து அந்தமூன்றும் கிளம்பி, பஸ்ஸ்டாண்டு செல்லும் ரோடில் சர்ச்சு வடபுறம் கிளம்பின, அப்போது எதிர்ப்புறமாக சென்னையிலிருந்து வந்த ஒரு லாரியில் அ தி மு க வினர் கொடிகளைக் கட்டிக்கொண்டிருந்தனர்.

அவர்களது கொடிகளையும் கோஷங்களையும் கண்டவுடன், தி மு க வேன்களிலும் ஜீப்களிலுமிருந்த ரௌடிகள் வண்டியை எதிரும் புதிருமாய் நிறுத்தி, வந்த லாரிமீது சரமாரியாக சோடா பாட்டில்களை வீசினார்கள்,

உடனே லாரியிலிருந்த அ தி மு க வினர் லாரியைத் தான் தண்ணீயைமேலேபோட்டுக்கொண்டு தப்பிச்சென்றனர். எத்தனை பேர் காயமுற்றனர் என்று தெரியவில்லை.

### நாகல் நகரில் தாக்கினர்

அதே ரௌடிக் கூட்டம், நாகல்நகருக்கு போய், அங்குள்ள அ தி மு க தேர்தல் அலுவலகத்தின் முன்னால் மதுரை ரிக்ஷாரங்கனும், மற்றுமுள்ள ரௌடிகளும் கீழே இறங்கி—அங்கு இருந்தவர்களை சோடா பாட்டிலை வீசி அடித்தார்கள். பட்டாக் கத்திகளையும், அரிவாள்களையும், கம்புகளையும் கொண்டு தாக்கினார்கள். அக்கம் பக்கமிருந்த மக்களையும் தாக்கினார்கள்.

உடனே தேர்தல் அலுவலகத்தைப் பாதுகாக்க, தொழிலாளர்களும் பொதுமக்களும் திரண்டு, அந்த ரௌடிக் கும்பலுக்கு செம்மையாகப் புத்தி புகட்டி அனுப்பினர்.

அந்தப் பகுதியில் அ.தி. மு க வின் ஒரு லாரியையும், 3 ஜீப்புகளையும், 2 கார்களையும் 2 கார்களையும் தி. மு. க. ரௌடிகள் உடைத்து நொறுக்கினார்கள்.

### மார்க்சிஸ்ட் கட்சி அலுவலகத்தை தாக்க முயற்சி

அதே தி. மு. க. ரௌடிக் கூட்டமானது சுமார் 6-30 மணிக்கு சேலம் ஹால் ரோட்டிலுள்ள மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அலுவலகத்தை நோக்கிவந்தனர். முதல் தடவையாக வேன்களிலும் ஜீப்களிலும் கட்சி ஆபீஸ் வழியாகச் சென்று, கம்புகளையும், இரும்புக் குழாய்களையும் ஆட்டிக் கொண்டே, "வெளியேவந்தே செத்தே"—என்று மிரட்டிக்கொண்டு சென்றனர்.

மீண்டும் அதே கூட்டம், அதே வேன்களிலும், ஜீப்களிலும் பக்கத்து ரோடுகளில் சுற்றிவிட்டு— கட்சி ஆபீஸ் வழியாக வந்து கம்புகளை ஆட்டி மிரட்டிக் கொண்டு போனது.

அப்பொழுது கட்சி ஆபீஸில் தோழர்கள் வி. ஏ. கருப்புசாமி, மணிவேல், இராமகிருஷ்ணன், திருச்சி பரமேஸ்வரன், திருப்பூர் கருப்புசாமி, தீக்கதிர் நிருபர் ஐ மாயாண்டி பாரதி ஆகியோர் இருந்தனர்,

இந்த மாதிரி திமுக ரௌடிகள் தாக்குதலுக்கு தயாராகிறார்கள் என்பதைப் புரிந்தவுடன், நகராசுத்தி தொழிலாளர்களுக்கு செய்தி பரவிற்று.

திமுக ரௌடிகளுக்குப் புத்தி புகட்டவும், கட்சி ஆபீசைப் பாதுகாக்கவும் நூற்றுக்கணக்கில் மாணத்தையும் திரணமாக மதித்து எதற்கும் தயாராக வந்து விட்டார்கள், ஆளுக்கொரு கம்பும் தடியுமாக.

### பெண்களும் திரண்டனர்

மூன்றாவது தடவையாக ரௌடிகள் வந்தால் நிச்சயம் மோதல் ஏற்படும் என்பதை அறிந்து, ஏராளமான பெண்களும் திரண்டுவிட்டார்கள்: இனி அந்த ரௌடிகள் வந்தால், தடப் பக்கடை பியந்துபோக நாங்களே அடித்து விரட்டுகிறோம் என்று ஆத்திரமுடன் பேசினார்கள்.

### கண்டனம்

நாகல்நகரில் அன்று நடந்த மகா பெரும் பொதுக் கூட்டத்தில், தோழர்கள் பி, ராமமூர்த்தி, ஏ. பாலசுப்ரமணியம், எஸ் ஏ தங்கராஜன் முதலியோர் இந்த வன்முறைச் செயல்களையும் போலீசார் செயலற்றுக் கிடப்பதையும் வன்மையாகக் கண்டித்துப் பேசினார்கள்,

### வேலை நிறுத்தமும் ஆர்ப்பாட்ட ஊர்வலமும்

இந்த வன்முறையாளர்களை அச்சுறுத்தவும், வன்முறையாளர்கள் மீது பொதுமக்களுக்குஎவ்வளவு ஆத்திரம் இருக்கிறது என்பதைப்பற்றி போலீசாருக்கு எச்சரிக்கை செய்வதற்காகவும், ஊழியர்களுக்கும் பொது மக்களுக்கும் தைரியமூட்டவும் 14—8—73ம் தேதி திங்கட்கிழமையன்று நகரத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்து பிரம்மாண்டமான ஊர்வலம் நடத்துவார்கள் என்று கூறினர்,

## 'விறு விறு' என்று ஏறும் விலைகள்

புதுடில்லி, மே. 12— சென்ற வருடத்தைவிட இந்த வருடம் எல்லா பொருள்களின் விலைகளும் ஏறியிருக்கும் அளவு மக்களைத் திக்குமுக்காடச் செய்துள்ளது.

எல்லாப் பொருள்களின் மொத்தவிலைக் குறியீட்டெண் ஒரே வருடத்தில் 31.1 புள்ளிகள் உயர்ந்துள்ளது.

அரசாங்கம் வெளியிட்டுள்ள இந்தப் புள்ளிவிவரம் ஏப்ரல் மாதம் மூன்றாவது வாரம்வரையுள்ள காலத்துக்குக் கணக்கிடப்பட்டதாகும்.

சென்ற வருடம் ஏப்ரல் மாதம் 22- தேதி எல்லாப் பொருள்களின் விலைக்குறியீட்டெண் 192.1 ஆகும்

1973 ஏப்ரல் 21-ம் தேதியன்று மொத்தவிலைக் குறியீட்டெண் 223.2. ஆகும்.

தொழிற்சாலைகளுக்குத் தேவைப்படும் கச்சாப் பொருள்கள் 68.9 புள்ளிகளும், உணவுப்பொருள்கள் 41.7 புள்ளிகளும் உயர்ந்துள்ளன.

மக்கள் வாழ்க்கையை நசமாக்கிக் கொண்டிருக்கும் இந்த விலைவாசி உயர்வு எங்குபோய் நிற்கும்.

மக்களின் நிலையைப்பற்றி கொஞ்சமாவது கவலைப்பட்டிருந்தால் அரசாங்கம் இந்த அளவு விலை ஏற்றத்தை அனுமதித்திருக்குமா?

## கேரளத்தில் மத்திய அரசு அலுவலக முன் சத்தியாக்கிரகம்

கொச்சி, மே, 10— அரசு ஊழியர்களை மேசடி செய்யும் 3-வது சம்பளக்கமிசன் அறிக்கையை எதிர்த்து, கேரள மாநிலமெங்கும் உள்ள மத்திய அரசு அலுவலகங்கள் முன் மத்திய அரசு ஊழியர்கள் கூட்டமாக உட்கார்ந்து கொண்டு சத்தியாக்கிரகம் செய்தனர்,

'சென்ற 9-ம் தேதி ஆரம்பிக்கப்பட்ட இந்த சத்தியாக்கிரகம் 11-ம் தேதி வரை நீடிக்கிறது.

திருவனந்தபுரத்தில மத்திய அரசு அலுவலகங்கள் முன் அந்தந்த அலுவலகங்களின் ஊழியர்கள் அலுவலக வாசல் முன் கூட்டமாக உட்கார்ந்து சத்தியாக்கிரகம் நடத்தினர் திருவனந்தபுரத்தில் தொலைபேசி எக்சேஞ்ச் நிலையம், தபால் நிலையம், மற்றும் பல மத்திய அரசு அலுவலகங்கள் முன் காலை 10 மணிக்கு சத்தியாக்கிரகம் துவங்கியது.

இவ்வாறு-எல்லா மாவட்டங்களிலும் பெரும்பான்மையான மத்தியஅரசு ஊழியர்கள் சத்தியாக்கிரகப் போராட்டத்தில் கலந்து கொண்டனர்.




## கைநெசவுத் தொழிலாளர் பட்டினியைப் போக்குவீர்களா?

ஐயா,

திருமயம் தாலுகா பொன்னமராவதியில் உள்ள நெசவாளர்கள் பலமுறை அதிகாரிகளைச் சந்தித்து நியாயமான கோரிக்கைகளை எடுத்துக் கோரி, அவற்றை நிறைவேற்றும்படி வலியுறுத்தினர். அதனால் பலனேது ஏற்படாது போகவே பல போராட்டங்கள் நடத்தின.

இதற்குப்பின், நூல் காரடு சப்ளை செய்துள்ளனர்.

திருச்சி உதவி இயக்குநரோ, எந்தவொரு அதிகாரியுமோ ஸ்தலத்திற்கு வராமலேயே, மாஸ்டர் வீவர்களை, கார்டு அடிக்கத்துவரச் செய்து, அங்கு இருந்தே கார்டுகளை விநியோகித்தும் விட்டார்கள். இதற்கு திருமயம் தொகுதி தி. மு. கழக எம். எல். ஏ. வான காடுவெட்டி தியாகராசனும் உடந்தையாம்.

எனவே, நாங்கள் ஆட்சேபணை செய்து மனு ஒன்றும் நேரடியாகக் கொடுக்கப் பட்டது. அதற்கு 'நான் ஒன்றும் செய்யமுடியாது. வேண்டுமானால், உடனே நீங்களும் தறிபோட்டுக் கொண்டு வந்தால் தான் உங்களுக்கும் கார்டு கொடுக்கிறோம் என்று அதிகாரிகள் கூறிவிட்டார்கள்

அதிகாரிகளின் இந்த நடவடிக்கையால் 25 க்கும் மேற்பட்ட நெசவாளர் குடும்பங்கள் கடந்த 22 நாட்களாகப் பட்டினி கிடக்கவேண்டிய அவலநிலை ஏற்பட்டுள்ளது

எனவே. நூல் அட்டையாள கார்டுகளை நெசவாளர்களுக்கே நேரடியாக வழங்க வேண்டும் என்றும். நூல்விலையைக் கட்டுப்படுத்த வேண்டும் என்றும் வலியுறுத்துகிறோம்,

அந்தக் காலத்தில் தோள் வலிக்க கைத்தறி துணிகளைச் சுமந்து விற்று நெசவாளர்களுக்கு வாழ்வளித்தோம் என்று பறைசாற்றி வரும் தி மு க அமைச்சர்களும், அவர்களுக்குக் கீழ் பணியாற்றிவரும் அதிகாரிகளும் இக்கோரிக்கையை ஏற்பார்களா?

இப்படிக்கு,

சே. சின்னையா,

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி.

## கோல்கேட்! கோ கோ கோ லா!

### லா...லா...லா....லாலிலோ

இந்தியாவில், உடலை வருத்தி உழைக்கும் தொழிலாளிகளுக்கும், விவசாயக் கூலிகளுக்கும். விவசாயிகளுக்கும். ஏனைய உழைப்பாளிமக்களுக்கும் வாழ்க்கைத் தர உயர்வு பற்றி உத்தரவாதம் இருக்கிறதோ இல்லையோ, வெளிநாட்டு முதலாளிகள் இந்தியாவில் போடு மூலதனத்திற்கு லபமாக கோடிக்கணக்கில் கொண்டு போக மட்டும் நிச்சயம் உத்தரவாதம் உண்டு.

உதாரணமாக, ரூ 3 லட்சமே மூலதனம்போட்ட கோல்கேட் கம்பெனி, (டூத் பேஸ்ட் மசலிபவை தயாரிக்கும் கம்பெனி) லாபமாக வெளிநாடு கொண்டு போனது ரூ. 2 கோடி.

அமெரிக்காவின் கோ கோ கோலா நிறுவனம ராயல்டியாக மட்டும் கொள்ளை அடித்துப் போனது 6 கோடிக்கு மேல்.

இந்த லட்சணத்தில் இந்திராவின் சுயபலக்கொள்கை பற்றிய வாய் வீச்சு மட்டும் குறையவில்லை. அதே சமயத்தில் நம்நாட்டின் செல்வத்தைக் கொள்ளையடித்து அனுபவத்துடன் அன்னிய முதலாளிகள் நம் நாட்டின் உல்லாசபுரிகளில் லா...லா...லா லலிலோ' பாடிக்கொண்டிருக்கின்றனர்.

## இந்திரா மீது கோர்ட் அவமதிப்பு வழக்கு

அலகாபாத் மே. 11— கான்பூரில் மே 1ம் தேதியன்று பிரதமர் இந்திரா நிகழ்த்தியிருக்கும் பேச்சு நீதிமன்றத்தை அவமதிப்பதாக இருக்கிறது என்று கூறி அவர் மீது அலகாபாத் உயர் நீதிமன்றத்தில் வழக்குத்தொடுக்கப்பட்டுள்ளது.

வழக்கறிஞர் ஆனந்த் ஸ்ரீ ரங் திவாகர் இந்த வழக்கைத் தொடுத்துள்ளார்.

கான்பூரில் ஒரு பொதுக் கூட்டத்தில் ஏ. என். ராயை சுப்ரீம் கோர்ட் பிரதம நீதிபதியாக நியமித்திருப்பதற்கான காரணங்களை விளக்கிப் பேசும்போது பிரதமமந்திரி இந்நாட்டின் நீதிபரிபாலனத்தையே இழிவுபடுத்தியிருப்பதாகத் தன்னுடைய மனுவில் தழக்கறிஞர் திவாகர் கூறியுள்ளார்.

இந்தியாவிலுள்ள நீதிமன்றங்களைச் சமூகத்தின் ஒரு பகுதிக்கு மட்டும் சேவை செய்திருப்பதாகவும், இனிமேல் புறக்கணிக்கப்பட்ட பகுதியின் நன்மைக்கும் நீதிமன்றங்கள் சேவை செய்யும் என்று பிரதம மந்திரி கூறியிருப்பது நீதிமன்றங்களின் சௌரவத்தைப் பறித்துள்ளது என்றும் குறிப்பிட்டுள்ளார்.

இந்த வழக்கை பிரதம நீதிபதியின் உத்தரவுக்கு உயர்நீதிமன்ற நீதிபதி ஹமீ ஹுசேன் அனுப்பி வைத்துள்ளார்.

## மான் உருவில் வந்த மாரீசன் கொலைகாரன் தலைமையில் 'விவசாயிகள்' சங்கமா?

### தஞ்சை மாவட்ட விவசாயத் தொழிலாளர் சங்க செயலாளர் கோ. வீரையன் அறிக்கை

திருவாரூர், மே 11— தஞ்சை மாவட்டத்தில் விவசாயிகள் சங்கம் என்ற பெயரில் ஓர் சங்கம் அமைக்கப்பட்டிருப்பதாக 9-5-73 "தினமலர்" பத்திரிகையில் செய்தி வந்துள்ளது.

இந்தச் சங்கம் விவசாயிகள் என்ற பெயரில் அமைக்கப்பட்டு இருக்கிறது. கடந்த 25 ஆண்டுகளாக விவசாயிகள் இருந்துவந்த ஒற்றுமையினை சீர்குலைக்கவும் விவசாயத் தொழிலாளர்களை தாக்கவும், கொலை செய்யவும், ஏழை விவசாயிகளின் நிலங்களை பறித்துக் கொண்டு அவர்களை கூலிக்காரர்களாக்கவும்,

நிலப்பிரபுக்கள் சதிகள் பல செய்து பல பெயர்களில் சங்கங்களை துவக்கி நல உரிமை சங்கம், மிராசுதார்கள் சங்கம், தாழ்த்தப்பட்டோர்லீக். ஜாதிப்பெயர்களில் சங்கங்கள், நில உடைமையாளர் சங்கம், இறுதியாக நெல் உற்பத்தியாளர் சங்கம், இப்படியாக அவ்வப்போது விவசாயிகளிடமிருந்துவரும் எதிர்ப்புகளிலிருந்து தப்பித்துக் கொள்ளவும்,

தங்களின் கோர வெறித்தனங்களை நிறைவேற்றிக் கொள்ளவும் செய்தார்கள். பெயர் மாற்றங்களின் மூலம், 1964ல் நாகை தாலுகாவில் விவசாயத் தொழிலாளர்களின் கூலி உயர்வு கோரிக்கையை முறியடிக்க,

ஆய்மழை மைனர் ரமநாதன் தலைமையில் நெல் உற்பத்தியாளர் சங்கம் என்ற பெயரில் சங்கம் துவக்கப்பட்டு சிறுவிவசாயிகளிடம் பல்லாயிரக் கணக்கான ரூபாய்களை வசூலித்து சங்கத்திற்காக வென்று 'ஜீப்' ஒன்று வாங்கி தலைவர்களாக இருந்தவர்கள். அதனை (ஜீப்பை) விற்று குடித்துத் தீர்த்தனர். அதை உபயோகித்துதான் இறிஞ்சியூர் கோபாலகிருஷ்ணன் நெல் உற்பத்தியாளர் தலைவராக வந்தார்.

கோபாலகிருஷ்ணன் தலைமையில்தான் 1968 டிசம்பர் 25-ம நாள் இரவு கீழ் வெண்மணியில் 44விவசாயத் தொழிலாளர்கள் ஓர் குடிசையில் அடைத்து எரிக்கப்பட்டார்கள்.

இதன் தொடர்பான வழக்கில் சென்னை உயர் நீதிமன்றம் நிலப்பிரபுக்கள் நேரில் சென்று தீயிட்டார்கள் என்றும் நம்பமுடியவில்லை என்று கடந்த 7—4—73ல் தீர்ப்பு வழங்கி விட்டனர்.

தஞ்சை மாவட்ட நிலப்பிரபுக்களுக்கு புதிய தைரியம் பிறந்து இருக்கிறது. உலகில் எந்த நாட்டிலும் நடவாத இந்தக் கோரக் கொலையை செய்த பிறகு நீதிபதிகளின் பெயரில் நம் வர்க்க நலன்களை பாதுகாக்கும் கைக்கூலிகள் தான் இருக்கின்றனர், நாம் எதை வேண்டுமானாலும் துணிவுடன் செய்யலாம் என்ற தைரியத்துடன்,

மீண்டும் நெல் உற்பத்தியாளர் சங்கம் என்ற பெயரில் அமைத்தால் மக்கள் நம் மீது காரி உமிழ்வார்கள் என கருதி வெண்மணி படுகொலைகளை புரிந்தவர்களே வரும் ஒன்று கூடி "விவசாயிகள் சங்கம்' என்ற பெயரில் ஓர் சங்கத்தை துவக்கியுள்ளார்கள்.

### தலைவர்

இந்த சங்கத்தின் தலைவர் யார்? இறிஞ்சியூர் கோபாலகிருஷ்ணன்தான், வெண்மணிப்படுகொலையை புரிந்த கொலைக் குற்றம் சாட்டப்பட்ட கொலைகாரனை தலைவனாகக் கொண்டு புதிய பெயரில் வருகிறார்கள். இது "மாரீசன் மான உருவில் வந்ததைப் போல உள்ளது. கொலைகாரன் வருகிறான் விவசாயிகளின் பெயரில்

தஞ்சை மாவட்டத்தில் வாழும் விவசாயத் தொழிலாளர்களே! விவசாயிகளே! நல்லெண்ணம் கொண்டவர்களே!

இந்த கொலைகாரக் கூட்டத்திற்கு விவசாயிகள் நடுவே இடம் இல்லாமல் செய்யும் வேலையை செய்யுமாறும், நீங்கள் அனைவரும் சிறிதும் ஏமாறாமல் இருக்குமாறும்,

கீழவெண்மணி தியாகிகளின் சார்பாக உங்களை கேட்டுக் கொள்கிறேன்.

# இண்டி, சிண்டி ஏக் ஹை! சண்டையெல்லாம் ஜோக் ஹை!



## இவாளும் அவாளும் ஒண்ணு! அதே வழியில் இவாளும்!

"யாருக்கு ஓட்டுப் போடுவாதனாலும் திண்டுக்கல் வாக்காளர்கள் ஒரு அகில இந்தியக் கட்சிக்கே வாக்களிக்கவேண்டும்"

**-மத்திய அமைச்சர் ஜெ ஜீவன்ராம்**

"அ. தி. மு. க. தவிர வேறு யாருக்குப் போட்டாலும் சரிதான்"

**-திண்டுக்கல் தொகுதியில் காமராஜர்**

இந்த இரண்டு பெரும் புள்ளிகளின் பேச்சும் 9—5—73 "அலைஓசையில்" வெளிவந்துள்ளது. அதில் காமராசர் மறைமுகமாகத் தங்களை ஆதரிப்பதை வரவேற்று இந்திரா காங்கிரஸ் "நன்றி" அறிக்கை ஒன்றையும் வெளியிட்டிருக்கிறது.

நெருக்கடிகள் முற்றும் போதுதான் நண்பனையும், பகைவனையும் இனங்கண்டு கொள்ளமுடியும் என்பது பொதுவான அனுபவம்.

"இண்டிகேடும்— சிண்டிகேடும் இரட்டைக் கேடுகள்"—என்ற நமது மதிப்பீட்டின் மீது மண்வாரித் தூற்றியவர்கள்.

டெல்லிப் பேரசின்

—ஏக போக லைசென்ஸ் கொள்கை

—பாங்குகளின் கடன் கொள்கை

—நில விநியோகக் கொள்கை

—நூல் விநியோகக் கொள்கை

—உணவு இறக்குமதிக் கொள்கை

—மன்னர் மானியக் கொள்கை

—அமெரிக்காவுடன் வெளிஉறவுக் கொள்கை

—அங்கிருந்து பிச்சை வாங்கும் கொள்கை

ஆகிய அத்தனை கொள்கைகளிலும் இந்திராவின் பாஷையில் சொன்னால் "ஒரு மில்லி மீட்டர்" கூட —பழைய ஒன்றுபட்ட காங்கிரசின் பாதையிலிருந்து உடைபட்ட காங்கிரஸ "முற்போக்குச் சாலையில்" தன் முன்காலைக்கூட எடுத்துவைக்கவில்லை என்பதை ஊரும், உலகமும் தெளிவாக அறிந்து கொண்ட பின்னர்தான்—

—பம்பாய் நகரமன்றத் தேர்தல் முதல்

பங்கா நாடாளுமன்றத் தேர்தல்வரை

இவள் "காளித்தாய்" அல்ல — பிர்லாக்களில் "கூலித்தாய் என்றும்,

பட்டாளிகளின் "காவல் தெய்வம்" அல்ல —

"டாட்டாக்களின் ஏவல் தேவதை" என்றும் சிக்கலறப் புரிந்துகொண்டு தெருக்கோடியிலே தூக்கியெறிந்தார்கள்.

துணைத் தேர்தல்களில் எல்லாம் தூக்கியெறியப்பட்ட இந்த 'கோமாதா' தான், திண்டுக்கல்லின் 'குலமாதா' என்று கூறிக்கொண்டு — கொடிபிடிக்க ஆளில்லாது போனாலும், (கருப்புப்பணத்தில்) மடிபிடிக்க ஆள்கிடைக்காதா என்று மாடி வீடுகளின் 'கோத்ரேஜ்' பீரோக்களுக்குப் பின்னால் 'மர்மபேரம்' நடத்திக் கொண்டிருக்கிறார்களாம்!

"இந்திரா காந்தியின்" முற்போக்குத் தனமெல்லாம் (!) கம்யூனிசப் பாதைக்கு வழிகோலப் போகிறது" என்பதாக இந்திய மக்களிடம்இந்திராவை ஒரு புரட்சிக்காரியாகப் படம்பிடித்துக் காட்டியதில் ஒரு எதிர்மறைச் செல்வாக்கை உருவாக்கி, மறைமுகமாக இந்திரா காங்கிரசின் பெருஞ்செல்வாக்கினை ஏழைகள்மத்தியில் ஊடுருவ வைத்த பெருமை காமராஜர் காங்கிரசையே சாரும்!

தி. மு. க. கட்சிகள் இந்திராவின் 'சிவப்புத்தன்மை'க்கு நேர்முகச் சான்றிதழ் வழங்கியது போலத்

### தணிகைச் செல்வன்

தான் ஒரு மறைமுகச் சான்றிதழை காமராஜர் காங்கிரஸ் தன்பங்குக்கு இந்திரா காங்கிரசுக்குக் கொடுத்து வைத்தது!

இந்திரா காங்கிரசைப் பற்றிய இந்த இரண்டு 'கணிப்பு'களும் நடைமுறையில் இந்திராவின் அரசியல் பேருருவத்தைச் சிருஷ்டிப்பதற்கே பயன்பட்டன.

இன்று இந்திராவின் செல்வாக்கு மங்கத் தொடங்கிவிட்டது. அதைத் தூக்கிப்பிடிக்கப் 'புதுமுக' அரசியல் வாதிகளைவிட 'அறிமுக'மான காங்கிரஸ் தலைவர்களே அதிகம் தேவைப்படுகிறார்கள். அதற்குத்தகுந்த ஆளாகக் காமராஜர் கிடைத்திருக்கிறார்.

"அழிந்துபோன சிண்டிகேட்டின் செல்வாக்கைப் புதுப்பிக்க முடியாவிட்டாலும்"—

"அழிந்துவரும் இண்டிகேட்டின் 'பெருமையை'த் தடுத்துக் காப்பாற்றினலாவது"—

'எதிர்காலத்தில் ஏற்பட இருக்கின்ற 'இணைந்த காங்கிரஸ்'. இந்திய அரசியல் பங்கைத் தன் காலுக்குத் தள்ளாதா?—

என்ற ஏக்கமும் எதிர்பார்ப்பும் காமராஜருக்கு எற்பட்டிருப்பதைப் போலவே, ஜெகஜீவன்ராமுக்கும் ஏற்பட்டிருக்கிறது. இது இருவருக்கும் ஏற்பட்ட திடீர் ஞானோதயம் அல்ல; தற்செயலானதுமல்ல!

ஆளுகின்ற காங்கிரஸ்— சிண்டிகேட்டானாலும், இண்டிகேட்டானாலும்— இனிமேல்அதன்வீழ்ச்சியை வேடிக்கை பார்த்துக் கொண்டு 'விரோதம்" பாராட்டுகின்ற அபாய எல்லையைத் தாண்டி வந்து விட்டதன்விளைவைஇரண்டு காங்கிரசும் அச்சததுடன் கணிக்கத் தொடங்கி விட்டார்கள்.

எனவே, இனி அவர்களின் 'பதவிச் சண்டை' முற்றுப் பெற்று உதவிப் பணிகள் துவங்கும் அறிகுறிகள் தென்படுகின்றன. தமிழகத்தில் சாமராஜர் காங்கிரஸ், 'இந்திராவைவிட, பலமாக இருப்பதால் அவர்களது இணைப்பு, மற்ற மாநிலங்களில் வேகமாக நடைபெறுவது போல் இங்கு நடைபெறக் காணோம.

இந்திரா காங்கிரசை மிரட்டி தமிழகத்தில் தன் செல்வாக்கின் மீது 'காங்கிரஸ் இணைப்பை' உருவாக்கும் திட்டத்துக்குக் கடைசி ஆயுதமாக காமராஜர் தேர்ந்தெடுத்த களம் திண்டுக்கல்.

அந்தத் 'திண்டுக்கல்லே' அவரது கனவுகளின் கல்லறையாகி விடுமோ என்ற நிலைமை தோன்றவேதான், காமராஜர், இந்திரா காங்கிரசை மகிழ்விக்க முனைந்திருக்கிறார் உண்மையில் தான் 'இந்திராவின்' கொள்கை எதிரி அல்ல என்பதைக் காமராஜரால் இதைவிட ஸ்பஷ்டமாக வேறு எப்படிக் காட்டிக் கொள்ள முடியும்?

காமராஜரின் இந்தக் கடைக் கண் வீச்சுக்குத் தான் நன்றிப் பெருக்கோடு தன் காதல் கணைகளைச் செலுத்தி விட்டார். ஜெகஜீவன்ராம்!

இப்போது திண்டுக்கல் மக்களுக்கு மட்டுமல்ல — தமிழக மக்களுக்கும் தெரிந்து விட்டது—இது வரை திரைக்குப் பின்னால் நடந்ததெல்லாம் "நிழல் யுத்தத்தான்! நிஜ யுத்தமல்ல!"

திண்டுக்கல்லை மையமாக வைத்துத் தமிழக அரசியலின் 'திசை வழி' எது என்பதைத் தீர்மாணிக்கும் எதிர்கால ஜனநாயக அணியின் நிகழ்காலக் கருப்போல உருப் பெற்றிருக்கும் 'முற்போக்கு அணியில்' உள்ள அ. தி. மு. க. நண்பர்களும், வலது கம்யூனிஸ்டு நண்பர்களும், இண்டிகேட் —சிண்டிகேட் அபாயத்தைப் புரிந்து கொள்ளுவதில் காட்டுகிற அழுத்தமும் ஆழமும்தான் தான், வருங்காலத் தமிழகத்தின் வர்க்க அணிகளைத் தெளிவாக இனம் பிரிக்கத் துணை புரியும்.

அப்படி ஒரு அணி உருவாகும்போது திண்டுக்கல்லில் தி. மு. க.வுக்கு இன்று சர்வ நிச்சயமாகி விட்ட மூன்ருவது ஸ்தானம் கூட அன்று அதற்கு கிடைக்குமா என்பது ஐயந்தான்.

ஆகவேதான் சொல்கிறோம்:

இண்டி-சிண்டி ஏக் ஹை!
சண்டையெல்லாம்
ஜோக் ஹை!

---

## ஊருக்கு உபதேசமடி கண்ணே !
## அது நமக்கில்லையடி பெண்ணே!

# தி. மு. க. வேட்பாளருக்கு வேலை செய்ய ஆசிரியர்களை திரட்டுகின்றனர்

'ஆசிரியர்களுக்கு அரசியல் கூடாது' 'ஆசிரியர்கள் அரசியல் பணிகளில் ஈடுபடக்கூடாது' என்றெல்லாம் தமிழக தி. மு. க. அமைச்சர்கள் நாள்தோறும் உபதேசம் செய்து வருகிறார்கள்.

இது அரசாங்க விதியும் கூட!

ஆனல்,

தி மு கழகத்தின் நாளேடான 'முரசொலி'யின் 10-5-73ந்தேதிய இதழின் 2-ம்பக்கத்தில் ஒரு செய்தி வெளியாகியுள்ளது. அது வருமாறு:--

"திண்டுக்கல் இடைத்தேர்தலில் தி. மு. கழக வேட்பாளரின் வெற்றிக்குப் பாடுபடுவது என்று, தமிழ் நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் கழகம் முடிவெடுத்துள்ளது.

"இக்கழகத்தின் பேரவைக் கூட்டம் அண்மைமையில் மதுரையில் நடந்தது.

"அதுபோது முதல்வர் கலைஞர் தலைமையிலுள்ள கழக அரசு ஆசிரியர்கள் கழகத்திற்கு ஆற்றியுள்ள தொண்டுகளை எண்ணி திண்டுக்கல் தொகுதி இடை தேர்தலில் தி. மு. க. வேட்பாளர் பொன் முத்துராமலிங்கம் அவர்களை ஆதரித்து வாக்குகள் சேகரிப்பதென்றும், பிற தேர்தல் பணிகளை ஆற்றுவதென்றும் முடிவெடுக்கப்பட்டது.

இத்தகவல்களை கழகத்தின் மாநிலத் துணைத் தலைவர் வி. சு. கருணை எம். சி. அறிவிக்கிறார்."

குறிப்பு இந்த'ஆசிரியர் கழகம்'என்பதுஆசிரியர்களின் உரிமைகளுக்காகப் போராடி வரும் 'தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணி'யைப் பலவீனப்படுத்தும் நோக்கோடு—தி மு க அமைச்சர்களின் ஆலோசனையின் பேரிலும், தி மு க அரசுக்கு ஆதரவான சில ஆசிரியர்களாலும் தோற்றுவிக்கப்பட்ட ஒன்ருகும்.

'ஆசிரியர்களுக்கு அரசியல் கூடாது' என்று நாடு நகரெங்கும்— பட்டி தொட்டியெங்கும் பறைசாற்றிவரும்— உபதேசம் செய்து வரும் தி. மு. கழக அமைச்சர்கள்—

இன்று திண்டுக்கல் தொகுதியில் தமது கட்சி வேட்பாளருக்கு ஆதரவாக தேர்தல் வேலைகளைச் செய்யும்படி ஆசிரியர்களை இறக்கிவிட்டுள்ளார்கள்.

தி. மு. க. தலைவர்களின் உபதேசம் ஊருக்குத் தான், தி. மு. க. வுக்கில்லை...!

---

# மேயரின் புருடா!

மே 10-ம் நாள் மாலை முரசு ஏட்டில் திண்டுக்கல் நகர் சவரியார் பாளையத்தில் உள்ள மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தோழர்கள் 50 பேர் கட்சியை விட்டு விலகி தி .மு. க. வில் சேர்ந்து விட்டனர் என்று, மதுரை மேயர் முத்து பொதுக்கூட்டத்தில் சொன்ன புருடாவை "தமிழ் முரசு" பத்திரிகை மே. 10-ந் தேதியன்றுதேர்தல்சரடாகவெளியிட்டுள்ளதை அறிவீர்கள்.

இதுநாள் வரை தி. மு. க. அந்தப் பகுதியில் தன் பிரச்சாரக் கூட்டத்தை நடத்தக்கூட தொண்டர்கள் கிடைக்காமல் திண்டாடுகிறது. இவர்களுடன் இருந்த பழைய தி. மு. க. நண்பர்கள் 10 பேரும் இன்று அண்ணு தி. மு. க. விற்கு வந்துவிட்டனர்.

உண்மை நிலவரம் இது. இவ்வாறு இருக்க, மதுரை மேயர் வானத்தை வில்லாகவும், மணலைக்கயிருகவும் திரித்திருக்கிருராம். சேர்த்து இருக்கிருராம் ஐம்பது பேரை. கேளுங்கள், கேப்பையில் நெய் வடிகிறதாம்.

தேர்தல் நாள் நெருங்க நெருங்க, இவர்களுக்கு 'டிங்கி' காய்ச்சல் கண்டுள்ளது. மாவட்டச்செயலாளர் முத்து இவ்வாறு பிதற்றத்தான் செய்வார். பாவம்! இப்படியும் அவர் ஆகவேண்டிய நிலைமை ஏற்பட்டுள்ளதே! அந்தோ பரிதாபம்!

---

# முற்போக்கு ஜனநாயக கூட்டணி
# நாஞ்சில் கி. மனோகரன் பேச்சு

திண்டுக்கல், மே. 11—

திண்டுக்கல் தேர்தல் பிரச்சார பொதுக்கூட்டம் முகமதியபுரத்தில் மார்க்சீய கம்யூனிஸ்ட் கட்சி கிளை உறுப்பினர் தோழர் கோபால் தலைமையில் 10—5—73 அன்று இரவு நடைபெற்றது.

எஸ், ஏ. தங்கராஜன் [மார்க்சிஸ்ட்] கூத்தக்குடி ஷண்முகம், (வலது கம்யூனிஸ்ட் கட்சி)கி.மனோகரன் [அ. தி. மு. க.]பேசினார்கள்

நகரமே திரண்டுவந்த பெறும் கூட்டமாக இருந்தது.

இதில் மனோகரன் பேசும் போதுகுறிப்பிட்டதாவது —

இன்றுநான்,எனக்குமுன் பேசிய அருமை நண்பர் எஸ். ஏ. தங்கராஜன் அவர்களின் பேருரையில் சிந்தனையைச் செலுத்தினேன். உள்ளபடியே தி. மு. கவின் இரங்கல் கூட்டத்திலபேசும் உணர்வை பெறுகின்றேன். இடதுசாரி கம்யூனிஸ்டுகள் வலதுசாரி கம்யூனிஸ்டுகள் இந்த இரண்டு பெரும்கட்சிகளின் ஒன்றினைப்பால் அண்ணு திராவிட முன்னேற்ற கழகம் வலிவும் பொலிவும் பெறுகிறது.

### உள்ளபடியே இது முற்போக்கு கூட்டணி

மேலும் மனோகரன்பேசும் போது கூறியதாவது:—

இங்கு உள்ள கூட்டணி தோழமை கட்சிகளின் சேர்மானத்தை பாருங்கள். புரட்சியை பேச்சும் மூச்சுமாகக்கொண்ட தொழிலாளர் வர்க்கத்தின் உன்னத தலைமையான மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியுடன் சேர்ந்தும், வலது கம்யூனிஸ்ட் கட்சியுடன் சேர்ந்தும் அண்ணு திராவிட முன்னேற்ற கழகம் இணைந்திருப்பது இந்த நாட்டின் ஜனநாயக முற்போக்குஅணிஎன்பதில் சந்தேகமில்லை. அதில் மார்க்சிஸ்டுகள் இணைந்து வலுவூட்டி தனித்தன்மை பெறுகின்றது.

இது நிலையானது. தமிழ் மக்களின் உள்உணர்வானதும் கூட. தமிழ் நாட்டில் இடதுசாரி ஜனநாயகசக்தி உறுப்பெறுகிறது. இங்கு முற்போக்குக் கருத்துக்கள் உண்டு, ஜனநாயக பாரம்பரியம் உண்டு. புதுமை உண்டு. புரட்சி உண்டு.

### அங்கே என்ன வாழுது

அந்தப்புறத்தைப்பாருங்கள். அது ஒரு கூட்டா. அவைகள்-அனைத்துக்கட்சிகளும்பிற்போக்கு சக்திகள்; சமுதாயத்திற்குவேண்டாதவர்கள். வலதுசாரி மனோநிலைகொண்டவர்கள். ஜனல்ரோதக் கொள்கைகளை கொண்டவர்கள். ஜனவிரோதக் கொள்கைகளை தன்னகத்தே கொண்டவர்கள். இவர்களை நன்ருக அடையாளம் தெரிந்து கொள்ளுங்கள்.

### விசாரணை கமிஷன் போடும் அதிகாரம் யாருக்கு?

மததிய அமைச்சர் சி. சுப்பிரமணியம் அவர்கள் இண்டிகேட்டுக்கு ஓட்டுப் போட்டால் எம், ஜி. ஆர். கோரிய விசாரணைகமிஷன் நியமனம் செய்ய முடியும் என்று பேசியதாக நான் தினத்தாள்களில் செய்தி பார்த்தேன். இது உண்மை தான் என்ருல்இந்தஅமைச்சரின் பேச்சு சதைவிற்பனையாளரின் தரகுப்பேச்சு. அவருக்கு நான் சொல்லிக் கொள்வேன்: விசாரணை அதிகாரமும்தண்டனைதரும் வல்லமையும் நாலுகோடி தமிழ்மக்களிடம் உண்டு. அதை நாங்கள் பெற்றே தீருவோம்.

### கள்ளக்காதல்

பெரும் தலைவருக்கும் பூம்புகார் புகழ் கருணாநிதிக்கும் அரசியல் கள்ளக்காதல் நடந்துவருகின்றது. இது ஆகாதது, வயதுக்கு மீறிய செய்கை. சேருமானம் சரியாகவே இருந்தாலும் நடவாததும், முடியாததும் கூட.

அருமை நண்பர் மார்க்சிஸ்ட் தோழர் எஸ். ஏ. தங்கராஜன். கூறியபடி இந்த தேர்தல் காங்கிரஸ் தி. மு. க. வுக்கு தமிழகம்தரும் நல்ல தீர்ப்பு, சிந்தித்து செய்து முடிக்க செயல்படுவீர்கள் என்று கேட்டுக்கொள்கிறேன்.

---

# ஆரியப்பட்டியில் மாதர் சங்கம் அமைப்பு

ஆரியப்பட்டி, மே. 10—

ஆரியபட்டியில் மாதர் சங்க அமைப்புக்கூட்டம் மே. 9-ந்தேதி தோழியர் பேச்சி தலைமையில் நடைபெற்றது. இக்கூட்டத்தில் தோழர் பாப்பா உமாநாத் சிறப்பு சொற்பொழிவாற்றினார்.

வரிக் கொடுமையில் மத்திய சர்க்கார்–மாநில சர்க்கார்களின் பங்கு பற்றியும, பெண்களுக்கு உள்ள சமத்துவத்தைப் பற்றியும், ஏன் அண்ணு தி.மு.க.வை நாம் ஆதரிக்கிருேம் என்பதை பற்றியும், சிண்டிக்கேட், இண்டிக்கேட், தி. மு. க. கட்சிகளுடைய கொள்கையைப் பற்றியும், இவர்களை ஏன் திண்டுக்கல் தொகுதியில் தோற்கடிக்க வேண்டும் — இதில் பெண்கள் பங்கு என்ன என்பதைப் பற்றியும் பேசினார்.

இந்தக் கூட்டத்தில் 250 பெண்கள் கலந்து கொண்டார்கள். இந்தக் கூட்டத்தில் என். சந்தனம் தலைவராகவும், ஏ. பி. சங்கனம் உபதலைவராகவும், வி.

(6-ம் பத்தி பார்க்க)

(7-ம் பத்தி தொடர்ச்சி)

கே·பேச்சி காரியதரிசியாகவும், பி.கருப்பாயிஉபகாரியதரிசியாவும். பொன்னுத்தாள் பொருளாளராகவும் மேலும் 21 பெண்கள் உறுப்பினர்களாகவும் கொண்ட கமிட்டி ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது.

### பொதுக்கூட்டம்

ஆரியப்பட்டி, மே. 10—

இங்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பொதுக் கூட்டம் மே. 8-ல் நடந்தது. தோழர்கள் பாப்பா உமாநாத், கே.நடராஜன்,கே. பி. கருப்பணன் வி. கார்மேகம் ஆகியோர்பேசினர்.

கூட்டத்தில் 1500பேர்கூடி இருந்தார்கள். தற்காலிக அரசியல்பற்றியும் சிண்டிக்கேட்,இண்டிக்கேட்தி.மு.க. கட்சிகளுடைய பிற்போக்கான கொள்கை பற்றியும், ஏன் அண்ணு தி. மு. க.வை ஆதரிக்கிருேம் என்பதைப் பற்றியும் விளக்கினர்.

இரட்டை இலைச் சின்னத்திற்கு ஓட்டுப்போடும்படி கரகோஷத்திற்கிடையே மக்களை கேட்டுக் கொண்டனர். (ந. நி.)

---

# சதிகாரர்களின் கூடாரம் நிக்சனின் வெள்ளை மாளிகை

வாஷிங்டன், மே. 9—

மாற்றுக்கட்சியின் தேர்தல் காரியாலயத்தில் உளவு பார்ப்பதற்காக வாட்டர்கேட்டில் நிக்சனின் கையாட்கள் மேற்கொண்ட அவமானகர செயல்கள் அந்நாட்டுமக்களிடையே நிக்சனின் மீது வெறுப்பை ஏற்படுத்தியுள்ளன. அவரை குற்றவாளி என்ற உணர்வோடு தான் இன்று பார்க்கிறார்கள்.

இன்று ஜனதிபதி நிக்சனின் வெள்ளை மாளிகை அவமானகரமான செயல்கள், சதிகள், போன்றவைகளால் பின்னப்பட்ட வலையால் பின்னப்படட சதிக் கூடமாகவே அமெரிக்க மகளுக்கு காட்சி தருகிறது,

இதுவரை, வாட்டர்கேட்டில் நடைபெற்ற அவமானகரமான நடவடிக்கைகளில் தனக்குச் சம்பந்தமில்லை என்று நிக்சன் சொல்லி வந்தார். இதை மக்களிடம் ஊர்ஜிதப் படுத்தும் பொருட்டு டெலிவிஷன்களில் தோன்றினர். எனினும், அவரது சாகசங்கள் எடுபடவில்லை. நாட்டில் கடும் அதிருப்தி தோன்றியுள்ளது. நிக்சன் இன்று அமெரிக்காவின் ஒரு அரசியல் அவமானமாகக் கருதப்படுகிறர்.

ஏனென்றுல், அமெரிக்க அரசியல் அமைப்பின் படி சட்டசபையில் ஒரு நம்பிக்கையில்லாத தீர்மானத்தை நிறைவேற்றி நிக்சன் அரசாங்கத்தை கீழே இறக்க முடியாது. எனவே நிக்சன் 1977-ம் ஆண்டு ஜனவரி மாதம் 20ந் தேதி வரையிலும் அமெரிக்க ஜனதிபதியாக இருப்பார்.

நிக்சன் மீண்டும் ஜனதிபதியாக தேர்ந்தெடுக்கப்படுவதற்காக உருவாக்கப்பட்ட வாட்டர் கேட் நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து அரசாங்கபைல்களை அழித்தல், சாட்சிகளை மிரட்டுதல் போன்றவைகளுக்காக பல மில்லியன் டாலர்கள் செலவழிக்கப்பட்டுள்ளன. இந்த டாலர்கள் பெரும் பெரும் தொழில் அதிபர்களாலும், தொழில் கார்ப்பரேஷன்களாலும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. மீண்டும் நிக்சன் ஜனதியாக வருவதில் மிக அக்கறை எடுத்துக் கொண்டதற்கு காரணம் என்னவென்ருல், நிக்சனின் நிர்வாகம் அவர்களின் தொழில் அபரிமிதமான லாபம் கிடைப்பதற்குச் சாதமாக இருந்து வருவதேயாகும்.

ஆனல் நிக்சனின் இப்படிப்பட்ட நடவடிக்கைகள் மீது மக்கள் வெறுப்புக் கொண்டுள்ளனர்.

---

## அனந்தமெல்லாம் அவர்களுக்கே!

'இந்திய முதலீட்டுக் கழசம்' என்பது இந்திய அரசாங்கத்தால் நிறுவப்பட்டுள்ள ஓர் அமைப்பாகும். சிறு தொழில்களுக்கு உதவி செய்வதற்காக அமைக்கப்பட்டதாகும் இந்த நிறுவனம்.

இதுவரை, இந்த நிறுவனம் வழங்கிய மூலதன உதவி ரூ. 141 கோடியே 41 இலட்சமாகும்.

இந்தப் பணத்தில் பெரும் பகுதி யாருக்கு வழங்கப்பட்டுள்ளது தெரியுமா?

சிறு முதலாளிகளுக்குத் தானே உதவி செய்திருக்கும்என்றுகருதுகிறீர்களா? அதுதான் இல்லை! பின் யாருக்கு?

75 ஏகபோக முதலாளிகளின் பட்டியலில் உள்ள 17 முதலாளிகளுக்குத்தான். இவர்களில் டாட்டா, பிர்லா, மபத்லால், வால்சந்த் போன்ற 'சிறு' (?) தொழிலதிபர்களும் உள்ளனர்.

இவர்களுக்கு இந்த நிறுவனம் வழங்கியுள்ள நிதி உதவி எவ்வளவு தெரியுமா? 66 கோடியே 60 இலட்சம் ரூபாய்!

பார்த்தீரா!

'சோசலிச மாதா'—

'ஜனநாயகத்தொட்டிலில் வளர்ந்த புதல்வி' இந்திரா காந்தி ஆட்சியின் இலட்சணத்தை!

—ஆதாரம்:

இந்திரா காங்கிரஸ் ஆதரவு ஏடான 'பேட்ரியட்'

---

# அரசியல், பொருளாதார தத்துவ மேதை என்பது இப்பதான் புரிந்ததா?

"அகில உலக சித்தாந்த கட்சியின் தனிப்பெரும் இந்திய தலைவர் நண்பர் பி. ராமமூர்த்திஅவர்கள் எப்படி அதிமுகவுக்' ஆதரவு தர முடிந்தது என்று கேட்டாராம்.

இந்த தத்துவ மேதையைத்தான் தேசத் துரோகி என்று கூறி பாதுகாப்பு சட்டத்தின்கீழ் கைது செய்து மூன்று வருடம் சிறையில் அடைத்தாரோ? ஸ்ரீமான் பக்தவத்சலம்.

இவருக்கு இன்று ஏற்பட்ட கரிசனம் என்ன தெரியுமா? மார்க்சீய கம்யூனிஸ்டு கட்சியின் ஆதரவால்தான் இண்டிகேட், திமுக ஆகிய இரு கட்சிகளின் பொறுப்புத் தொகையை பறித்து அண்ணு திமுகவிடம் தரமுடியும என்பதை நன்கறிவார் பக்தவத்சலம் அவர்கள். இந்த வேதனையால்தான் இந்த ஆத்ம சோதனை பக்தவத்சலனுருக்கு.

## அதிமுகவில் என்ன புதுமை கண்டார் ராமமூர்த்தி என்று சி எஸ் கேட்கின்ருர்

6 மாதங்களுக்கு முன்னமே தோழர் ராமமூர்த்தி, எம். ஜி. ஆர். அவர்களுக்குஅழைப்புவிடுத்ததை நீங்கள் அறிவீர்கள். 25 ஆண்டு காலம் காங்கிரஸ் எதிர்ப்பு பணியிலே திமுகழகத்தை கட்டி வளர்த்தார்கள். அந்த தடம் புரளாத காங்கிரஸ் எதிர்ப்பு வழியில் மீண்டும் அடி எடுத்து வைத்து விட்டது இன்று அண்ணு தி.மு.க. இதுதான் ஜனநாயகத்தின் பாதை. இடதுசாரி ஐக்கியத்தின் திசை வழி. இந்த வழியைத்தான் வலியுறுத்தினர் தோழர் பி. ஆர். இதன் உள்ளடக்கத்தைமத்திய அமைச்சா மோகன் நன்கறிவார். எம் ஜி ஆர் அவர்களின் படையும், பி ஆர் அவர்களின் செம்படையும் தமிழகத்தில் இணைந்தால் இந்திராவின் கூலிப் படையும் கருணாநிதியின் அடியாட் படையும் புறமுதுகு காட்டி ஓடும் என்பதை உணர்ந்ததால் "என்ன புதுமை கண்டார்" என்று உளருகிருர்கள். உளரட்டும் தேர்தல் தோல்வி ஜுரம் அது.

## மாயத்தேவர் வெற்றி உறுதியாகி மூன்று வாரமாகிவிட்டது.

எதிர்க்கட்சி வேட்பாளர்களின் பொறுப்புத் தொகையை குறிப்பாக திமுக இண்டிகேட்டிடமிருந்து பறிக்கவே இந்த தேர்தலை நாம் நடத்தி வருகின்ருேம். நம்மைப் பொறுத்தவரை நாம்வெற்றிபெற்றுவிட்டோம். இது தொகுதி மக்களின் உணர்வு. பட்டிதொட்டிகளிலும் பட்டணங்களிலும் திமுக இண்டிகேட், சிண்டிகேட்டை மக்கள் கேள்வி மேல் கேள்வி கேட்டு விரட்டுவதை நாம் அறிவோம்.

மேயர்முத்துவிடம்பேகம்பூரிலும்,போடிநாயக்கன் பட்டியிலும் பெண்கள் சூழ்ந்து கேள்வி மேல் கேள்வி போட்டனர். வேறு வழியின்றி மிரட்டிப் பார்த்தாராம். பூதிபுரம சென்ற அமைச்சர் மாதவன் குடவனுத்து கால்வாய் திட்ட அணை கட்டுவதாக கூறி ஓட்டு கேட்டாராம்!

"உங்களுக்கு ஓட் இல்லை" என்றதும் "சட்டமும் நிர்வாகமும் எங்கள் கையில்" என்ருராம் மாதவன்.

இப்பொழுது புரியுதா? தி மு க வினர் எதை நம்பித் தேர்தலில் நிற்கிருர்கள் என்பது புரிகிறதா? மக்களை நம்பியல்ல; போலீசை நம்பி.

—திண்டுக்கல் கூட்டத்தில்
எஸ் ஏ தங்கராசு பேசியது

# இனிப்பான சரக்கு ஆனல் கசப்பான உண்மை

தற்போதைய சர்க்கரை ஆண்டில் சர்க்கரை (சீனி) உற்பத்தி அளவு 36 லட்சம் டன்னையும் மிஞ்சி விட்டது என அதிகார பூர்வமாக அறிவிக்கப்படுகிறது.

— தினமணி, 13—5—73

அப்படி என்றால், சீனி குறைந்த விலையில் தாராளமாகக் கிடைக்கவேண்டுமே? ஏன் கிடைக்கவில்லை?

“சீனி கிலோ விலை ரூ. 3-50 லிருந்து ரூ. 4-00 வரை விற்கிறது. ஏனிந்த நிலைமை?

இதற்குப் பின்னலே, இந்திய சர்க்கரை முதலாளிகளும், அமெரிக்க சர்க்காரும், இந்திரா ராணியின் ஆட்சியின் ஆசீர்வாதத்தோடு இந்திய மக்களை கொள்ளையடிக்கும் ஒரு பெரும் சதி திட்டமிட்டு நடக்கிறது என்பதை நீங்கள் அறிவீர்களா?

அமெரிக்காவுக்கும் இந்தியாவுக்கும ஏற்பட்ட ஒப்பந்தங்களில் அமெரிக்க முதலாளிகள் கையெழுத்துப்போடச் சொன்ன இடமெல்லாம் கையெழுத்து போடுவது நமது சுதந்திர இந்திய ஆட்சியின் பழக்கம்.

அதன்படியே இந்தியாவில் நியாய விலைக்கு ரூ. 2-20க்கு விற்கப்படும் சீனி அமெரிக்காவிற்கு 95 காசுக்கு கொடுக்கும்படி கோரினர் அமெரிக்க முதலாளிகள். மூச்சுவிடாமல் அந்தக்கோரிக்கையை ஏற்று கையெழுத்துபோட்டது இந்திய அரசு.

சரி இந்த ஒப்பந்தப்படி அமெரிக்காவுக்கு சீனி விற்பதற்கு இந்தியச் சீனி முதலாளிகளிடமிருந்து தானே கொள்முதல் செய்யவேண்டும்? இவர்களென்ன, அமெரிக்காகாரனுக்கு சீனி கிலோ 95 காசுக்கு விற்க ஏமாளிகளா என்ன?

சீனி ஏற்றுமதி செய்யவேண்டுமானல் மானியம் எங்களுக்கு கொடுத்தால்தான் ஏற்றுமதியும் செய்வோம என்றார்கள். அதற்கும் ஆமாம் சாமிபோட்டது இந்திய அரசாங்கம்.

இப்படி ஏற்றுமதி மானியம் என்ற பெயரில் இந்திய முதலாளிகளுக்கு இந்திய சர்க்கார் கஜானாவிலிருந்து மக்களின் வரிப்பணத்தை எடுத்துக் கொண்டது எவ்வளவு தெரியுமா?

1961-ல் 5 கோடியே 60 லட்சம்;
1962-ல் 14 கோடியே 20 லட்சம்.
1965-ல் 17 கோடியே 50 லட்சம்.
1966-ல் 20 கோடி
1967-ல் 7 கோடியே 46 லட்சம்.

இவ்வாறு 67 வரையில் மட்டும் 70 கோடியே 10 லட்சம் ரூபாய்க்கு குறையாமல் அரசாங்க கஜானாவிலிருந்து மக்களின் வரிப் பணம அள்ளிக் கொடுக்கப்பட்டது.

இவ்வளவு ‘சிறிய’ தொகையை மானியமாகப் பெற்றுக்கொண்ட அந்தப் பெரிய மனிதர்கள் யார் தெரியுமா?

இந்தியாவின் ஏகபோக முதலாளிகளில் முக்கியமானவர்களான சாட்சாத் பிர்லா, சாட்சாத் டால்மியா போன்ற ஒரு சிலர்

இவர்களது சரக்கு விற்பனை வருவாய் அபரிமிதமாக இன்று உயர்ந்துள்ளது.

ஓராண்டில், பிர்லா 16 கோடியே 6 லட்சம்.
டால்மியா 3 கோடியே 67 லட்சம்;
ஜே. கே. 2 கோடியே 9 லட்சம்;
கனேரியாஸ் 2 கோடியே 88 லட்சம்.
பாரீஸ் 7 கோடியே 55 லட்சம்;
ரூயாஸ் 4 கோடியே 46 லட்சம்;
சுராஜ்நாகர்மால் 3 கோடியே 42 லட்சம்
ராமகிருஷ்ணன் 4 கோடியே 84 லட்சம்

என்று சீனி விற்பனை அதிகரித்துக்கொண்டே போகிறது. அதிகரிக்காதா என்ன? ரூ. 1—00 அடக்க விலை உள்ள சீனியை ரூ 4—க்கு விற்ருல் யராதா?

இதில் குறைந்தது 30 சத விகிதம் லாபம் என்று கொண்டால்கூட (பல முதலாளிகள் 30 சத விகிதத திற்கு மேல் டிவிடெண்ட் கொடுத்துள்ளனர்)

பிர்லாவின் லாபம் ரூ 4 கோடியே 98 லட்சம்
டால்மியாவின லாபம் ரூ 1 கோடியே 10 லட்சம்.

இப்படியே கணக்குப் பார்த்துக் கொள்ளுங்கள் லாபம் இப்படி? சர்க்காரின் ஏற்றுமதி மான்யம் வேறே!

இப்படியாக அமெரிக்க சர்க்காரும், இந்திய முதலாளிகளும் கொள்ளையடிக்க இந்திரா ஆட்சி அனுமதிக்கிறது.

காங்கிரஸ் கட்சி தேர்தலுக்குப் பணம் தருபவர்கள் யார்?

இதே புள்ளிகள் தாம்!

சீனி எவ்வளவு இனிப்பானது? ஆனல் இந்த இனிப்புச் சீனிக்கு பின்னல் எவ்வளவு கசப்பும் வேதனையும் அடங்கியுள்ளது பாரீர்!

# அரியாங் குப்பம் நினைவா? சிண்டிகேட் காமராசர் பேச்சும் இண்டிகேட் ஜார்ஜ் வரவேற்பும்

திண்டுக்கல். மே. 12—

கடந்த வாரம காந்தி மைதானத்தில் நடந்த சிண்டிகேட் காங்கிரஸ் பொதுக்கூட்டத்தில் காமராசர் பேசினர். அவர் பேசுகையில், ஸ்தாபனக் காங்கிரசுக்கு ஓட்டுப் போடாதவர்கள் திமுக வுக்கும் போட வேண்டாம், அண்ணா திமுகவுக்கும் போட வேண்டாம். வேறு யாருக்காவது போடுங்கள் ”—என்று குறிப்பிட்டார்.

காமராசரின் இப்பேச்சைக்குறிப்பிட்டு, மத்திய சர்க்காரின் இந்திரா காங்கிரஸ் அமைச்சர் ஜார்ஜ்,” காமராசரின் பேச்சு வரவேற்கத்தக்கது என்றும், திமுக வுக்கும் அதிமுக வுக்கும் வாக்களிக்காமல் வேறு யாருக்காவது வாக்களிக்கும படி காமராசர் பேசியிருப்பதானது ஆளும் காங்கிரஸ்க்கே ஆதரவு அளிக்கச் சொல்லியிருப்பதாக எடுத்துக் கொள்ள வேண்டுமென்றும் குறிப்பிட்டுள்ளார்.

# ஆத்தூர் தொகுதியில் மார்க்சிஸ்ட் தேர்தல் வேலைகள் தீவிரம்

## அ. தி. மு. க. வுக்கு ஆதரவு திரளுகிறது

ஆத்தூர், மே 12—

அ. தி. மு. க. வேட்பாளரை ஆதரித்து மார்க்சிஸ்ட் கட்சி தீவிரமாக வேலை செய்து வருகிறது. ஆத்தூர் தாலுகாவை 6 பகுதிகளாகப் பிரித்து, அ. தி. மு. க. ஊழியர்களையும் வலது கம்யூனிஸ்ட் ஊழியர்களையும் சேர்த்து ஊழியர்கள் கூட்டங்கள் நடத்தி, தேர்தல் வேலைகளை முழுவேகத்துடன் நடத்தி வருகிறது.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொறுப்பாளர் தோழர் வி. ஏ. கருப்புசாமியும் அ. தி. மு. க. தலைவர் பம்மல் நல்ல தம்பி, மதுரை மாவட்ட அ. தி. மு. க. அமைப்பாளர் சங்கரபாண்டியன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

தமிழக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் செயலாளர் தோழர். ஏ. பாலசுப்ரமண்யம், கன்னிவாடி, அய்யம்பாளையம், சித்தரேவு. சின்னளப்பட்டி ஆகிய ஊர்களில் மார்க்சிஸ்ட் கட்சி ஊழியர்கள் கூட்டங்களை நடத்தி நமது கட்சியின் கொள்கைகளை விளக்கியும், ஜனநாயக சக்திகளின் ஒற்றுமை நீடிக்க வேண்டிய தின் அவசியத்தைப் பற்றியும், அ. தி. மு, க. வெற்றி பெற தீவிரமாக வேலை செய்ய வேண்டிய அவசியம் குறித்தும் பேசினர்.

# திண்டுக்கல் தொகுதியில் குமார் குழுவின் இசைவிருந்து

திண்டுக்கல், மே. 12—

குமார் கலைக் குழுவினர் ஆத்தூர் தொகுதியில் தேவரப்பன்பட்டி, நெல்லூர், அய்யம்பாளையம், ஆகிய ஊர்களிலும்—திண்டுக்கல் தொகுதியில் திண்டுக்கல் நகரின் பல்வேறு வார்டுகளிலும, கொண்டமநாயக்கன்பட்டி. கஸ்பா பள்ளபட்டி, பாரப்பட்டி, மேட்டுராசபட்டி ஆகிய இடங்களிலும் பாட்டுக் கச்சேரி நடத்தி, அதிமுக வுக்கு மக்கள் ஆதரவைத் திரட்டி வருகிருர்கள்.

### ஆத்தூர் தொகுதியில்

ஆத்தூர் தொகுதியில் கருப்பிமடம், புல்லமபட்டி, வெள்ளமடத்துப் பட்டி, கன்னிவாடி, சின்னளபட்டி, நெல்லூர், தேவரப்பன்பட்டி, அய்யம்பாளையம், காந்திகிராமம், பஞ்சமபட்டி ஆகிய ஊர்களில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் தலைவர்கள் தோழர்கள் பி. ராமமூர்த்தி. ஏ. பாலசுப்ரமண்யம், கே. ரமணி, பாப்பா உமாநாத், வி. ஏ. கருப்புசாமி ஆகியோர் அதிமுக வேட்பாளரை ஆதரிக்கும்படி பொதுக்கூட்டங்களில் பேசி வருகிருர்கள்.

இந்திரா காங்கிரசைச் சேர்ந்த மத்திய மந்திரிகள் மோகன் குமாரமங்கலம், உள்துறை உதவி அமைச்சர் மொய்சின் முதலியவர்கள் இப்பகுதிகளுக்கு வந்து தலையைக காட்டி விட்டுப் போனுர்கள். அவர்கள் பேசிய கூட்டங்களில் 100, 200 பேர்கள் கூட கூடாததால், ஆத்திரததுடன் பேசிவிட்டுப் போனுர்கள்.

மாநில அமைச்சர்கள் ஓ. பி. ராமன், மாதவன், ராஜாராம், ப. உ. சண்முகம், சாதிக்பாட்சா ஆகியோர் அவரவர்களுடைய மதத்தினரையும் ஜாதியினரையும் தேடிப் பிடித்து சொந்தம் பாராட்டி, உறவு கொண்டாடி வந்தாலும் கூட்டம் கூடுவது இல்லை.

இதனல் மந்திரிகளுக்கு கோபமும், ஆத்திரமும வந்து, பிறகு தம்மை தாமே தேற்றிக் கொள்ளும் முறையில் “கூட்டமெல்லாம் அதிமுகவுக்குத் தான் ஆனல் ஓட்டெல்லாம் எங்களுக்குததான்’என்றுகூறிக் கொள்ளுகின்றனர்.

# மதுரை முத்துவின் வேலை என்ன?

திண்டுக்கல், மே. 13—

திண்டுக்கல் தேர்தலுக்கு இறக்குமதி செய்யப்பட்டுள்ள மதுரை முத்து, நாகல்நகரில் நடந்த பொதுக்கூட்டத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டு கட்சியைத் தாக்கினர்.

அவர் பேசுகையில் இந்த ஊரில் எங்கே இருக்கிருன கம்யூனிஸ்ட்? இங்குஒருவன் கூட இல்லை. 1-வதுவார்டை கம்யூனிஸ்ட் கோட்டை என்று சொல்லி வந்தானுங்க. முனிசிபல் தேர்தலின் போது அங்கே நான் போய், அந்தக்கோட்டையைத் தகர்த்து தி.மு.க.வை வெற்றிபெறச் செய்தேன்.

அப்புறம் தங்கராஜுனு ஒருத்தன் 15-வது வார்டிலே இருக்கான். இப்போ அங்கேயும் போய்ப்புகுந்தேன். ஒரேநாளில் 500 பேர் நம்ம பக்கம் வந்திட்டானுங்க.

ஏதோ சவுரியார்பாளைத்தில் கொஞ்சம்பேர் இருக்கானுங்க, அவுங்களையும் இந்த தேர்தலிலே பாத்து வருகிறேன்”—என்று பேசினர்.

அவர் இப்பொழுது பொதுக் கூட்டங்களில் பேசுவது இல்லை. இரவு நேரங்களில் குண்டர்களைத் திரட்டி வருவதில்தான் தீவிரமாக வேலைசெய்து வருகிருர்.

# அம்பத்தூர் தொழிற்பேட்டையில் ‘தர்ணு’ போராட்டம்

## வி பி சிந்தன் அறிக்கை

சென்னை மே. 13—

“மின்வெட்டு காரணமாக தொழிலாளர்கள் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளனர். நீண்டநாட்களாகப் போராடிப்பெற்ற பல உரிமைகளையும் இந்த நெருக்கடியைப் பயன்படுத்தி முதலாளிகள் பறிக்கின்றனர். ஒப்பந்தங்களை மீறுகின்றனர். ஆட்குறைப்புக்குத்திட்டமிடுகின்றனர்.

கொள்ளை விலையில் கொழுத்த லாபம் அடைந்த போதெல்லாம் தொழிலாளர்களின் நியாயமான உரிமைகளை மறுத்த முதலாளிகள் இப்போது நஷ்டம் எனக் கூறி இந்த அநீதிகளைச் செய்கிருர்கள். வேலையில்லாதநாட்களுக்கு சிறு தொழிற்சாலையில் நஷ்ட ஈடு வழங்குவதே இல்லை.

நீடித்துவரும மின்வெட்டை காரணமாகக் காட்டி சில தொழிற்சாலைகளில் ஆட்குறைப்பும் செய்து வருகின்றனர்

மத்திய- மாநில அரசுகளின் திறமையின்மையே இந்த மின் வெட்டுக்கு காரணம் ஆகவேதான்மத்தியமாநிலஅரசுகள் தொழிலாளர்கட்கு நிவாரணம் அளிக்க வேண்டுமென்று சிஐடியூ வலியுறுத்தி வருகிறது. இந்த அரசுகள் நியாயமானஇக்கோரிக்கைகளை மறுக்கின்றன.

இதைக் கண்டித்தும், உடனடியாக நிவாரணம் வழங்கக் கோரியும், ஆட்குறைப்பை எதிர்த்தும், தொழில் பேட்டையில் இமமாதம் 14-ந் தேதி காலையில் இருந்து ‘தர்ணு’ செய்வது என்று இந்தியதொழிற்சங்க மையம் முடிவெடுத்துள்ளது. தொழிலாளர்கள் இந்த ‘தர்ணு’வில் பெருவாரியாகக் கலந்து கொள்ள வேண்டும் என வேண்டிக்கொள்ளுகிறேன்

மேலே கண்டவாறு, தோழர் வி. பி. சிந்தன் அறிக்கை விடுத்துள்ளார்.

# உடுமலை நகரில் குடி தண்ணீர் பஞ்சம்

உடுமலை, மே. 11—

உடுமலை நகரில் ஒரு மாத காலமாக தண்ணீர் பற்ருக் குறையால் மக்கள் கடுமையான சிரமத்திற்குள்ளாகி வருகிருர்கள். 10—5—73ம் தேதி கூடிய ஹோட்டல் தொழிலாளர் சங்க நிர்வாகக்கமிட்டி மேற்கண்ட பிரச்னையை பரிசீலனை செய்து அவசரநடவடிக்கையாக 11—5—73ம்தேதிஇரவு 10 மணிக்கு தீப்பந்த ஊர்வலம் நடத்தியது.

இரவு 10-30 மணிக்கு 100க்கு அதிகமான ஹோட்டல் தொழிலாளர்கள் தீப்பந்தம்ஏந்தியபடி உணர்ச்சிகரமான கோஷங்களை எழுப்பிச்சென்றனர்.

நகரததின் முக்கிய வீதிகளின் வழியாகவும், மக்கள் குடியிருப்பு பகுதிகளிலும் ஊர்வலமாகச் சென்று, இறுதியில் 11-30 மணிக்கு உடுமலை நகர மன்றத்தின் முன் ஆர்ப்பாட்டம் நடத்தி, நகரமன்ற ஆணையாளரிடம், செயலாளர் எம். எஸ். ராமசாமி, கட்சி தா. க. செயலாளர் என். வெங்கிடாசலம் சி. ஐ. டி, யூ. செயலாளர் ஆர். பார்த்தசாரதி, இ. வி. ராஜு, ராமமூர்த்தி, கிருஷ்ணன் ஆகியோர் மகஜர் சமர்ப்பித்தனர். உடனடியாக மக்களுக்கு குடி தண்ணீர் கிடைக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்றும், வற்புறுத்தினர். ஆணையாளர் திருமூர்த்தி அணையில் ஆயில் என்ஜின் மூலம் தண்ணீர் இறைத்து இன்னும் அதிகம் கிடைக்க ஏற்பாடு செய்கிறேன் என்று உறுதி கூறினர்.

இறுதியில் காந்தி சவுக்கில் உள்ள நகர மன்றத் தலைவர் வீட்டின் முன் கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில் வெங்கிடாசலம், பார்த்தசாரதி ஆகியோர் குடிதண்ணீர் பிரச்சனைக்காகமக்கள்ஒன்றுபடவேண்டிய அவசியம்பற்றியும் நகரமன்ற நிர்வாகம் உடனடியாக பிரச்சனை தீர்க்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று வற்புறுத்தியும் பேசினர்.

# ஒரு ரிக்ஷாவுக்கு ஒரு நாளைக்கு பத்துரூபாய்

திண்டுக்கல், மே. 12—

இந்நகரிலுள்ள சைக்கிள் ரிக்ஷா தொழிலாளர்களிடம தி. மு. க, வினர் சென்று. ஒவ்வொரு ரிக்ஷாவிலும் தி. மு. க. கொடிகளையும் தட்டியையும் கட்டினல், தினம் 10 ரூபாய் தருவதாக கூறினர்கள்.

ரிக்ஷா தொழிலாளர்களோ’ “தேர்தல் சமயமாச்சே, ஒரு கட்சிக் கொடியை கட்டினல். பிழைப்பு போய்விடுமே”—என்று சொன்னுர்களாம்.

அதற்கு திமுகவினர்’ “பிழைப்பு போனுல்என்ன? அதற்குதான் 10 ருபாய் தருகிரேமே!” என்று கூறியதுடன், திமுக கொடிகளை கட்ட மறுத்தால, மே மாதத்திலிருந்து லைசென்ஸ் கொடுக்கமாடடோம்என்று மிரட்டினுர்கள்,

நோட்டைக் கையில் கொடுத்து வலுக்கட்டாயப் படுத்தி சில தொழிலாளர் களைச சரிக்கட்டினுர்கள்.

ஆனல் மறுநாளோ, அநத ரிகஷா தொழிலாளர்களும் கமயூனிஸ்டு செங்கொடிகளையும் அ. தி. மு. க. கொடிகளையும் கட்டிக் கொண்டு திண்டுக்கல் நகரைச் சுற்று சுற்றுன்னு சுற்றலானுர்கள்.

# அ. தி. மு. க, கூட்டத்திற்கு ...

1-ம் பக்கம் தொடர்ச்சி

சென்று விட்டனர்.

இதுகுறித்து மின்வாரிய அதிகாரிகளிடம் சம்பந்தப்பட்ட தொழிலாளியும், சிஐடியூ சங்கமும் முறையிட்டும் எவ்வித நடவடிக்கையும் இதுவரை எடுக்கப் பட்டதாகத் தெரியவில்லை.

மின்சாரத் தொழிலாளர்களுக்கு பாதுகாப்பற்ற இந்நிலைநீடிக்குமானுல்அவர்கள் தங்களைப் பாதுகாக்கநேரடி நடவடிக்கையில் இறங்குவதைத்தவிர வேறுவழியில்லையென தமிழ்நாடு மின்சார போர்டு தொழிலாளர் சங்கம்(சி.ஐ,டி.யூ) தெரிவிக்கின்றது.

— ந. நி.

# பதுங்கிக்கிடக்கும் பதுக்கல்கள்

கல்கத்தா மே. 10—

கல்கத்தாவில் ஒருரகசியமான இடத்தில் உள்ள கிட்டங்கியில் ஒருலட்சத்து 75ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள 13 ஆயிரம்குவிண்டால் தானியங்கள் கல்கத்தா என்போர்ஸ்மென்ட் போலீசாரால் பிடிக்கப்பட்டதாம்.

ஒருகிட்டங்கி தானியம் தான் பிடிபட்டுள்ளது கல்கத்தாவிலும், வங்கத்தின் ஏனைய பல பகுதிகளில் எததனையோ ரகசிய கிட்டங்கிகள் இருக்கின்றன. எததனை யோ கோடிரூபாய் மதிப்புள்ள தானியங்கள் குறைந்த காலத்தில் கொள்ளையடிப்பதற்காக பதுங்கிக் கொண்டிருக்கின்றன.

# கோதையாறில் மேதின கூட்டம்

கோதையாறு மே. 12—

கோதையாறில் மார்க்சிஸ்ட் கமயூனிஸ்ட் கட்சி சார்பில் மே 8ல் மே தின ஊர்வலம், பொதுக்கூட்டம் நடந்தன. தோழர் ர. முத்துசாமி தலைமையில் தோழர்கள் ராகவன், நாராயணன் சிதம்பரம், பாலச்சந்திரன், பி திவாகரன், பி சி. வேலாயுதம ஆகியோர் மேதினவரலாறுகுறித்தும் மணல்ஆலை தொழிலாளர் போராட்டம், தோட்டத்தொழிலாளர் போராட்டம் குறித்தும் பேசினர்.

பொதுக் கூட்டத்துக்கு முன்னர் பெரும் ஊர்வலம் நடந்தது.

# திருமங்கலம் பகுதியில் திருப்பரங்குன்றம் தோழர்கள் சைக்கிள் பிரச்சாரம்

திருமங்கலம், மே 13—

திருமங்கலம் பகுதியெங்கும் ஆயிரத்துக்கும் மேற்பட்ட சைக்கிள் ஊர்வலம், ஊர் ஊராகச சென்று அதிமுக வேட்பாளருக்கு ஆதரவு திரட்டி வருகிறது. இந்த சைக்கிள்களில் பாதிக்கு மேற்பட்டவற்றில் செங்கொடிகள் பறக்கின்றன, மற்ற சைக்கிள்களில் அதிமுக கொடிகள் பறக்கின்றன.

திருப்பரங்குன்றத்திலிருந்து ஆர்வமிக்க இளைஞர்கள் தாங்களாகவே இந்த சைக்கிள் ஊர்வலத்தை நடத்துகின்றனர்.

ஊர்வலம் ஒரு இடத்தை கடப்பதற்கு ஒரு மணி நேரம் பிடித்துள்ளது.

சைக்கிள் ஊர்வலமும், அதில் சென்றவர்களின் உணர்ச்சிமிக்க கோஷங்களும் மக்கள் மனதைக் கவரும் வகையில் அமைந்துள்ளது.

ஆர்வமிக்க இளைஞர்களின் ஊர்வலங்களிலும் பிரச்சாரத்திலும் திமுகவினரும் இண்டிகேட் சிண்டிகேட் காங்கிரஸ்காரர்களும் மனம் குன்றியுள்ளனர்.

# திண்டுக்கல் தேர்தல் நிதி வசூல்

| | |
|---|---|
| முன் வசூல் | 680—37 |
| போடி கிளை | 50—00 |
| பூலத்தூர் கிளை | 25—00 |
| மாரப்பன் தலைமையில் சி ஐ டி யூ மாநாடு சென்ற திருப்பூர் தோழர்கள் | 15—50 |
| உடுமலை எஸ். வி. மில் கிளை | 10—00 |
| குடியாத்தம், தாரணம்பேட்டை மோகன் ஜகதீசன், விஜயகுமார் தரணீபதி | 10—00 |
| சென்னை எம். பச்சைப்பன் | 2—00 |
| நெய்வேலித் தோழர்கள் | 8—00 |
| தாராபுரம் தாலுகா டெக்ஸ்டைல் லேபர் யூனியன் | 10—00 |
| போடி | 108—00 |
| சில்லமரத்துப்பட்டி | 50—00 |
| மண்ணூதது | 6—00 |
| மயிலாடும்பறை | 11—00 |
| கடமலைக்குண்டு | 22—00 |
| குமணன் தொழு | 15—00 |
| தூத்துக்குடி துறைமுகத தொழிலாளர் | 5—00 |
| திருப்புவனம் கிளை | 5—50 |
| எம். கே. சீத்தான் | 2—00 |
| நெல்லை ஷணமுகவேலாயுதம் | 2—00 |
| காசிம் | 0—50 |
| மைதீன் | 0—50 |
| உச்சிமானி | 1—00 |
| தாமஸ் நாடார் | 0—50 |
| பேச்சிமுத்து | 0—50 |
| சோமு | 1—00 |
| சின்னசிவசாமி | 1—00 |
| ஆறுமுகம்பிள்ளை | 0—50 |
| சொக்கலிங்கம் | 1—00 |
| வெள்ளைச்சாமி | 0—50 |
| கே. எஸ். ராமசாமி | 0—50 |
| என். அருணசலம் | 2—00 |
| எப். பிச்சைராஜ | 1—00 |
| கே. சொரணம் | 1—00 |
| அண்ணமலை | 1—00 |
| கோமதி | 1—00 |
| பத்மநாபன் | 1—00 |
| எஸ். என். ராமசாமி | 1—00 |
| பி. செல்லக்கனி | 2—00 |
| சுநதரம் | 1—00 |
| நெல்லை டி. கணபதி | 1—00 |
| ” கணபதி | 1—00 |
| ” கே. மாடசாமி | 1—00 |
| உடுமலை தாலுகா கமிட்டி | 100—00 |
| ” ” ” மூலம் | 40—00 |
| தாராபுரம் மோட்டார் கிளைச் செயலாளர் பி. நாச்சிமுத்து | 10—00 |
| தொழிற்சங்க கூட்டுறவு மில் / செயலாளர் கே. கருப்பையா | 10—00 |
| என். கே. நல்லசாமி | 10—00 |
| சி. கருப்புசாமி | 10—00 |
| எஸ். நாச்சிமுத்து | 10—00 |
| எஸ். வி பழனிச்சாமி | 10—00 |
| மதுரை தாலுகா | 100—00 |
| சருகு வலையபட்டி | 10—00 |
| பேட்டைவாய்த்தலைகிளை | 25—00 |
| பாப்பநாயக்கன்பாளையம் 1வது வார்டு கிளை | 10—00 |
| போடி கிளை | 85—00 |
| திருவேங்கடம் கிளை | 10—00 |
| சாயிபாபா காலனி ஜோதிபாசு மன்றம் | 10—00 |
| ஹோ-சி-மின் நகர் (கவுட்டிகாளை) | 10—00 |
| கோவை 14 வது வார்டு சிவராமன் மன்றம் | 10—00 |
| ரத்தினபுரம் பி. ஆர். மன்றம் | 10—00 |
| கோவை ரத்தினபுரி தியாகி அப்பாய்மன்றம் | 10—00 |
| 1 வது வார்டு கிளை | 10—00 |
| 14 வது வார்டு கறிக்கடை பழனியப்பன் | 5—00 |
| டீக்கடை டி. நாணு | 5—00 |
| கோவை ஜில்லா பஞ்சாயத்து-முனிசிபல்-ஜெனரல் தொழிலாளர் சங்கம் | 10—00 |
| 12வது வார்டு கட்சிக்கிளை | 10—00 |
| காந்திபுரம் பொதுஜன சேவா நிலையம் | 10—00 |
| பொள்ளாச்சி தாலுகா நவமலைக்கிளை | 10—00 |
| | 1608 — 87 |

# எலிக்கறியும், பன்றிக்கறியும் தின்னச்சொன்னவர்களுக்கா உங்கள் ஓட்டு?

அன்று—

சோறு கிடைக்காமல் பசியால் வாடிய மக்களிடம் எலிக்கறிச் சாப்பிடச் சொன்னுர் உத்தரப் பிரதேச காங்கிரஸ் உணவமைச்சராக இருந்த ஜண்டா சிங்.

இன்று—

சோறு கிடைக்காவிட்டால் பன்றிக் கறி சாப்பிடச் சொல்கிருர் தமிழக தி. மு. க. அரசில் உள்ள மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சரான அன்பழகன்.

பன்றிக் கறியும் கிடைக்காவிட்டால். “பிண்ணுக்கையும், தவிடையும்” உண்ணச் சொல்கிருர்.

இவற்றில் சத்து உள்ளதாக செப்புகிருர்.

பசியால் துடிக்கும் மக்களுக்கு சோறு அளிக்க வக்கில்லாத — கையாலாகாத காங்கிரஸ் கட்சிகளுக்கும், தி. மு. கழகத்திற்குமா நாம் வாக்களிக்கவேண்டும்?

இந்த மக்கள் விரோதிகளை முறியடிக்க தவருதீர். மறவாதீர். நமது வாக்கு “இரட்டை இலை” சின்னத்திற்கே.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்து வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர்: கே. முத்தையா.